# ஹரிதாஸ ஹ்ருதய

## (பாகம் 4)

## ஆஸ்விஜ & கார்த்திக மாதத்திற்கான ஹரிதாச சிந்தனைகளின் தொகுப்பு

கன்னடத்தில் :

திரு.ஏ.பி.ஷ்யாமாச்சார்
பெங்களூரு

தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டவர்

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
89044 58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

# ஹரிதாஸ ஹ்ருதய
## (பாகம் 4)

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
ஸ்ரீப்ராணேஷ தாஸரின் ஆராதனை நாளான
02-10-2022 அன்று வெளியிடப்பட்டது.

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**

## பொருளடக்கம்

# முன்னுரை

ஹரிதாச சாகித்யம் ஆத்யாத்ம / லௌகிக வாழ்க்கையின் பொருள் ஆகியவற்றை விளக்குவதாக இருக்கிறது. ஆகவே இன்றுவரை அந்த சாகித்யம் அழியாமல் வருகிறது. உடலில் இருக்கும் இதயம் எப்படி ரத்தத்தை சுத்தமாக்கி நாம் வாழ வழி செய்கிறதோ, அது போல இந்த 'ஹரிதாச ஹ்ருதய' நம் இதயத்தில் இருக்கும் அழுக்குகளை சுத்தமாக்க உதவுகிறது. இதில் தினத்திற்கு ஒன்று என்று சிந்தனை இருக்கிறது. இதில் இருப்பது விஷயங்களின், தத்வங்களின் சாரம் / சுருக்கம் மட்டுமே.

ஹரிதாஸ ஹ்ருதய என்னும் இந்தப் புத்தகத்தை கன்னடத்தில் எழுதியவர் திரு.ஏ.பி.ஷ்யாமாச்சார் அவர்கள். ஒரு ஆண்டில் வரும் 360 நாட்களில், நாளுக்கு ஒன்று என மொத்தம் 360 சிறிய கட்டுரைகள் இதில் உள்ளன. சைத்ர & வைஷாக மாதத்தின் கட்டுரைகள் பாகம் 1ல் வெளிவந்தன. இந்த பாகம்-2ல் ஜ்யேஷ்ட & ஆஷாட மாதங்களின் கட்டுரைகள் உள்ளன.

ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள், பண்டிகை, விரத நாட்களில் – அந்தந்த ஹரிதாசர்களைப் பற்றி / பண்டிகை விரதங்களைப் பற்றி மற்ற ஹரிதாசர்கள் பாடிய குறிப்புகள் இதில் உள்ளன. மத்வ சித்தாந்தக் கருத்துகள் அனைத்தையும் பற்றியும் ஹரிதாசர்கள் பாடியுள்ளனர். அவை அனைத்தும் இந்தப் புத்தகத்தில் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. இந்த முழுப் புத்தகத்தையும் படித்தால், ஹரிதாசர்களின் கருத்துக்களின் வழியே, நம் மத்வ சித்தாந்த தத்வங்களை சுலபமாக அறியலாம்.

அனைவரும் இந்தப் புத்தகத்தை படித்து, அடுத்து வரவிருக்கும் பாகங்களையும் வாங்கிப் படிக்கவேண்டும் என்று விரும்புகிறோம். அனைவருக்கும் ஹரிவாயு குரு ஹரிதாசர்களின் அருள் என்றைக்கும் கிடைக்கட்டும் என்று ஸ்ரீஹரியிடம் வேண்டிக் கொள்கிறோம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**15-06-2022** **'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

## ஆஸ்விஜ சுத்த ப்ரதிமை
## நடவடிக்கைகள் இப்படி இருக்கட்டும்

தினமும் படிக்கவேண்டிய, எப்போதும் மனதில் இருக்கவேண்டிய, நிரந்தரமாக நினைக்கவேண்டிய, அதன்படியே நடக்கவேண்டியவை தாசர்களின் வாக்குகள். ஸ்ரீஹரியின் ரக்ஷணை நமக்கு இருக்கட்டும்.

ராம நாமவனு நுடி நுடி ||ப||
காம க்ரோதவ பிடி பிடி ||அப||

ஹரி நிர்மால்யவ முடி முடி பரமாம்ருத ரச குடி குடி
குருகள சரணவ ஹிடி ஹிடி பந்த
துரிதகளெல்லவ ஹொடி ஹொடி ||1||

சஜ்ஜன சங்கம மாடோ மாடோ
துர்ஜன சங்கவ பிடோ பிடோ நம்ம
அர்ஜுன சாரதிய நோடோ நோடோ
ஹரி பஜனெயலி மன இடோ இடோ ||2||

கரிராஜவரதன சாரோ சாரோ ஸ்ரம
பரிஹரிசெந்து ஹோடோ ஹோடோ
வரத பீமேஷன தொரதிரோ நம்ம
புரந்தரவிட்டலன சேரோ சேரோ ||3||

ஸ்ரீஅக்ஷோப்ய தீர்த்தரின் வாக்கு இப்படியாக இருக்கிறது:

ஸ்மர கிருஷ்ணம் பஜஹரிம் நம விஷ்ணும் ஸ்ரயாச்யுதம் |
த்யஜ காமம் ஜஹி க்ரோதம் ஜஹி மோஹம் பவாலயம் ||

ஸ்ரீமதாசார்யரின் உபதேசம் இவ்வாறு:
குரு புங்க்ஷ்வச கர்ம நிஜம் நியதம் ஹரிபாத வினம்ரதியா சததம்

இப்படி நடப்பவர்களுக்கு ஸ்ரீஹரியின் கருணை இப்படி இருக்கிறது.
அனன்யாஸ் சிந்தயந்தோமாம் ஹே ஜனா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபி யுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ||

## ஆஸ்விஜ சுத்த த்விதியை

## எனக்கு நீயே உறவினர்

மனிதன் அனைவருடனும் சேர்ந்து வாழ்பவன். உற்றார் உறவினர், இஷ்ட மித்திரர் என்று அனைவருடனும் சேர்ந்து வாழ்பவன். உறவினர்களின் சம்பந்தம் விடமுடியாதது. இந்த உறவுகளின் பின் பல காரணங்கள் இருக்கின்றன. இங்கு அதை தாசர் இவ்வாறு விளக்குகிறார். இறுதியில் அனைத்தையும் படைத்தவனான ஸ்ரீஹரியே நமக்கு உறவினர் என்று முடிக்கிறார்.

தனதிந்த நெண்டரு கெலவரு எனகின்னு
தனுவின நெண்டரு கெலவரு எனகின்னு
மனதிந்த நெண்டரு கெலவு எனகின்னு
தினதிந்த நெண்டரு கெலவு எனகின்னு
குணதிந்த நெண்டரு கெலவு எனகின்னு
இனிது நெண்டரொள் எனகெ ஒப்பர காணே
அனுவாகி இத்தரெ அஷ்டு நம்மவரெல்ல
அனுவு தப்பிதரென்னு ஆரு நம்மவரல்ல
நனகெ நினகெ நெண்டதனவின்னு ஹீகல்யா
அனிமிஷ அகலதெ அனிமித்தபந்து ஆகி
க்ஷணபிடதலெ காயுவ கோபாலவிட்டலா
நினகெ மாடுவதேனு நமோ நமோ என்னிந்த || -- ஸ்ரீகோபாலதாசர்

உலகத்தில் உறவினர்களின் உறவைப் பற்றி விளக்குகிறார். சில சமயம் மிகவும் நெருங்கியும், சில சமயம் சண்டையிலும் முடிகிறது. காரணம் நமக்குள் இருக்கும் வேற்றுமை. இதற்கே உறவினராவதற்கும் விதிகளை இட்டார் தாசர். இதை பின்பற்றுவது மிகவும் கடினம். ஆனால் இதுவே உண்மை. நிலையை அறிந்து வாழவேண்டும். ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்று அறிந்து வாழவேண்டும். அப்படியே பின்பற்றவும் வேண்டும். ஸ்ரீஹரியே 'யோக க்ஷேமம் வஹாம்யஹம்' என்று சொல்லியிருக்கிறான். மனம் வைத்தால் தன்னையே கொடுப்பவன் ஸ்ரீஹரி ஒருவனே. தாசர் ஒரு இடத்தில் சொல்வது:

பிடெனோ நின்ன பாத எந்தெந்திகெ
பொடெவியொளகெ இன்னு நினகெ சரி ஆரில்ல
த்ருடவாகி நீனல்லதெனகின்னு கதியல்ல || -- ஸ்ரீகோபாலதாசர்

ஸ்ரீமதாசார்யர்: ஹரிரேவ பரோ ஹரிரேவ குரு: ஹரிரேவ ஜகத் பித்ருமாத்ரு கதி: || என்றார்.

**ஆஸ்விஜ சுத்த த்ருதியை**
**பிறவிக்கடலைத் தாண்டு**

தாபத்ரயவெம்ப தாவானலதிந்த
பாபர சங்கவெம்ப விஷவைக்ஷதிந்த
காபதவெம்ப பஹு தப்பு கதிகளிந்த
கோபவெம்பட்டுவ காளோரகதிந்த
ஈ பரியலி நொந்தெ பவாடவியலி
நீ பாலிசலி பேகென்னன்னு சிரிகிருஷ்ணா || -- ஸ்ரீவியாசராஜர்

பிறந்து வந்த ஜீவரின் நிலை இப்படி இருக்கிறது என்கிறார் ராஜர். ஆதிதெய்விக, ஆத்யாத்மிக மற்றும் ஆதிபௌதிக என்னும் மூன்று பாவங்களும் நம்மை பிடித்திருக்கின்றன. கூடவே துர்ஜனர்களின் சகவாசம். நாம் போகும் வழியும் தவறாகவே இருக்கிறது. இதற்கு மேல் கோபம், பொறாமை போன்ற குணங்கள். இவற்றால் வாழ்க்கை தவறாகவே போகிறது. வேறு வழியைத் தேடவேண்டியிருக்கிறது. ஸ்ரீகிருஷ்ணா நீயே என்னை காப்பாற்ற வேண்டும் என்று வேண்டுகிறார்.

ஸ்ரீவியாசராஜரின் குருவான ஸ்ரீபாதராஜர் இதே போன்று சொல்வது:

பவவெம்ப அடவியலி தாபத்ரயதி சிலுகி
பயகொள்ளவந்தெ கெல்லவுதகெ ஸ்ரீஹரிநாம
ஹொரதாகி மத்துண்டெ என்ன மனவ நின்ன
சரணதல்லிட்டு சலஹோ நமோ ரங்கவிட்டலா ||

ஸ்ரீவியாசராஜரின் சிஷ்யரான ஸ்ரீவாதிராஜர், அனைத்து சஜ்ஜனர்களுக்காகவும் ஸ்ரீஹரியிடம் வேண்டிக்கொள்வது இதுவே.

மதமத்ஸரதி பந்து கெலவு காலவ களெதெ
குதிவ காமக்ரோதகளல்லி சங்கடகொம்பெ
அந்தகனாகி பரர பேடி பேஸரிஸதெ
சாதன சம்பதக்கெ ஹரிபாதவன்னு நெரெனம்பததரொளகெ
பஹுவ்யாதிகளல்லி சங்கடகொம்பெ
பதுமனாப ஹயவதனன்ன பாதவன்னு நம்போ மனவே ||

சாமான்யர்கள் சம்சாரத்தில் மூழ்கி எப்படி வாழ்கிறார்கள் என்பதை தன்னுடைய அனுபவமாக சிந்தித்து நம்மை எச்சரிக்கிறார். இறுதியில் ஹயவதனின் பாதங்களே கதி என்று வேண்டுகிறார்.

**ஆஸ்விஜ சுத்த சதுர்த்தி**
**நாளை என்று சொல்லக்கூடாது**

நாளெ மாடுவ தர்மவிந்த கையலி பேகு
நான்யாரோ நீன்யாரோ நுடி மானவா யம
நொளகதவரு பாரெந்து செளெவாக
நாளெ மாடேனெந்தரெ பாரதய்யா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

'காலனவரு பந்து கரபிடிதெளெவாக தாளுதாளெந்தரே தாளுவரே?' என்று கேட்டு, தற்போதைய நிலையை அறியவேண்டும் என்கிறார் ஸ்ரீபுரந்தரதாசர். சாஸ்திரங்களும் 'கைஹீத இவ கேஷேஷு ம்ருத்யுனா தர்மமாசரேத்' என்கின்றன.

எப்போதோ செய்த புண்ணிய கர்மங்களினால் இந்த பூமியில் பிறந்து வந்த பிறகு, செய்யவேண்டியது என்ன என்று அறியவேண்டும் என்கிறார். 'சாதன சரீரவிது நீ தயதி கொட்டத்து, சாதாரணவல்ல சாதுப்ரியனே' என்பது போல, இந்தப் பிறவி கிடைத்திருக்கிறது. இது எப்போது முடிந்துவிடும் என்பது தெரியாது. அதாவது இந்த தேகம் நிரந்தரமல்ல. அதற்கே தாசர் 'வேளெ ஹோகத முன்ன தர்மவ களிஸிரோ, சுள்ளின சம்சாரதி சுளிகெ சிலுகபேடி' என்று எச்சரிக்கை விடுக்கிறார். இதுவே மிகவும் சிறந்த உபதேசம் ஆகும்.

இந்த சம்சார சாகரத்தில் விழுந்து கஷ்டப்படுபவர்கள் நாம். ஆனால் இந்தப் பிறவி நிரந்தரமல்ல என்று இந்த தேகத்தின் மேல்

உள்ள ஆசையை விட்டுவிடு என்கிறார். நம் உறவினர், நண்பர் யாரும் நம்முடன் வரமாட்டார்கள். வருவது நாம் செய்த தர்மம் மட்டுமே. அதற்கே 'தர்மவ களிஸிரோ' என்ற ரகசியத்தை நம் காதில் ஓதினார். நாளை செய்கிறேன் என்று சொல்லாதீர்கள். காரணம், நாம் நாளை இருப்போமா என்பது தெரியாது. கோபாலதாசர் ஒரு இடத்தில் இதையே 'ஹோகுதிதெ எலோ ஹொத்து, கூகுதிதெ எலோ ம்ருத்யு' என்றார். இதை நினைவில் கொள்ளவேண்டும்.

இந்த தேகம் நிரந்தரமல்ல. இந்த தேகத்தினால் செய்த பாவ புண்ணியங்கள் நம்முடன் வரக்கூடியவை. இதற்காக தாசர் 'நாளெ மாடுவ தர்மவிந்தெ கெய்யலி பேகு' என்றார். இது அனைத்து சாதகர்களும் மறக்கக்கூடாத விஷயமாகும். நற்காரியங்கள் செய்வதற்கு கிடைத்த பிறவி இது என்று அறிந்து, உடனடியாக அதை பயன்படுத்திக் கொள்ளுமாறு ஆணையிட்ட தாசரின் கருணை அளப்பரியது.

**ஆஸ்விஜ சுத்த பஞ்சமி**

## வாயுதேவரின் மூன்று அவதாரங்கள்

ஸ்ரீவியாசராஜரிடம் தீக்ஷை பெற்று, ஸ்ரீமதாசார்யரின் மதத்தைப் பின்பற்றிய கனகதாசர், முக்யபிராணர் மற்றும் அவரின் மூன்று அவதாரங்களை வர்ணித்துப் பாடியது இவ்வாறு:

குரு முக்ய பிராணன மானவரெல்ல பஜிஸிரோ ||ப||
பரம பதவீவுவ குருமுக்ய பிராணனே
தரெயொளகுள்ள மானவரெல்ல பஜிஸிரோ ||அப||

அந்து த்ரேதெயலி ஹனுமனாகி அவதரிஸி
பந்து தாஷரதிய பாதகெரகி
சிந்துவனெ தாடி முத்ரிகெயித்து தானவர
விருந்த பார தஹிஸி சூடாமணிய தந்தவன ||1||

த்வாபரயுகதி பீமசேனனெனிஸி
ஸ்ரீபதிய பாத கடு பஜகனாகி
கோபாவேஷதி துக்காசனனனு ஸீளி

பூபர பலதொளகெ ஜரெஜரெது கரெதவனெ ||2||

கலியுகதலி துரீயாஷ்ரமவெனெ தரிஸி
கலுபத மாயிகளனு சோலிஸி
கிலவாத மத்வமதவனெ நெலிஸி காகி
நெலெயாதிகேசவ பரதெய்வ எந்தெனிசுவன ||3||

இங்கு கனகதாசர், ஹனும பீம மத்வ அவதாரங்களைப் பற்றி சுருக்கமாக வர்ணிக்கிறார். இந்த அவதாரங்களின் மூலரூபியான முக்யபிராணனை மற்றும் ஸ்ரீமதாசார்யரின் மதத்தைப் பின்பற்றுபவர்களுக்கு கிடைக்கும் பரமானந்தத்தை விளக்குகிறார்.

நந்ததீர்த்தர மததொளகெ பந்தவரெல்ல |
எந்திகாதரு பரமானந்த பொந்துவரு || -- ஸ்ரீகனகதாசர்

இப்படி கனகதாசர், மத்வ தத்வங்களை ஒப்பிக்கொண்டு, பின்பற்றி, புரந்தரதாசரைப் போல மற்ற சஜ்ஜனர்களுக்கு அறிவுறுத்துகிறார். தம் கிருதிகளின் மூலம் ஸ்ரீமதாசார்யரின் மற்றும் பகவந்தனின் சேவையை பற்பல விதங்களில் செய்து சத்கதி அடைந்த மகானுபாவர் ஸ்ரீகனகதாசர்.

**ஆஸ்விஜ சுத்த சஷ்டி**

**வாயுதேவரே பிரம்மன்**

ஸ்ரீஜகன்னாததாசர் தமது ஹரிகதாம்ருதசாரத்தில் வாயு பிரம்மரைப் பற்றி இவ்வாறு கூறுகிறார்.
ஸ்ரீதருணி வல்லபனு ஈர்வரொளாவ காலதலி |
நீத பக்தி ஞான பல ரூபாதிஷயதிந்தித்து ||

வாயு பிரம்மரில் ஸ்ரீஹரியானவர் எல்லா காலங்களிலும், ஞான பக்தி வலிமை என்ற மூன்று குணங்களிலும் நிலைத்திருக்கிறார். சிறிது விஷயம் அதிகம் தெரிந்து கொண்டிருந்தாலும், பிரம்மன் வாயுவிற்கு சமம் என்றே அறியப்படுகிறார். ஜீவோத்தமரான இவர் ருஜுகணஸ்தர், ஞானி, அனைத்து நல்ல லட்சணங்களையும் பெற்றவர்.

ஸ்ரீஜகன்னாததாசர், பிரம்மவாயுகளைப் பற்றி, அவர்களது ரூபங்களைப் பற்றி கூறியதாவது:

புருஷ பிரம்ம விரிஞ்சி மாஹ
ந்மருத முக்யபிராண த்ருதி ஸ்ம்ருதி
குருவர மஹாத்யாத பல விக்ஞாத விக்யாத |
கரளபுக் பவரோக பேஷஜ
ஸ்வர வரண வேதச்ய ஜீவே
ஷ்வர விபீஷண விஸ்வசேஷ்டக வீதபய பீம || (21-6)

ககுபேஷரொளு நியாமகனாகி தத்வார்த்த |
ப்ரகடி மாடுவ பாவி விகனஸனிகெ ||

ஹரிகதாம்ருதசாரத்தில் ஸ்ரீஜகன்னாததாசர், வாயு பிரம்மனை ஒரே பெயரில் அழைத்தது மிகச் சிறந்த விஷயமாகும்.

அனில ஸ்திதி வைராக்யநிதி ரோ
சன விமுக்திகனந்த தஷமதி
அனிமிசேஷானித்ர ஷுசி சத்வாத்மக சரீர |
அணு மஹத்ரூபாத்மகாம்ருத
ஹனுமதாத் யவதார பத்மா
சனபதவி சம்பிராப்த பரிசர ஆகணாஷ்மசம || (21-7)

அனில, ஸ்திதி - என்னும் காரணப் பெயர்கள், வாயு பிரம்மன் என இருவருக்கும் பொருந்தி வருகின்றன.

ஸ்ரீபுரந்தரதாசர், முக்யபிராணரை ஸ்தோத்திரம் செய்தவாறு:

சதுரயுகதி தானு அதிபலவந்தனு |
சதுர்முகனய்யன சதுர மூர்த்திகள சதுரதனதி பஜிஸி |
சதுர்முகனாகி சதுர்வித பல கொடுத ||

ஸ்ரீஸ்ரீபாதராஜர் தம் மத்வ நாமாவில்:
அஜ பதவியனு ராம கொடுவெனெனெ ஹனுமந்த |
நிஜபகுதியனு பேடி வரவ படெத || என்றார்.

## ஆஸ்விஜ சுத்த சப்தமி
## வாழ்க்கையின் கதை

புட்டிதெ புவியொளு பஹுதின
களெதெனோ புட்டிசபேடவென்ன ||ப||
பட்டாபிராமனெ பரம கட்யாகி
நின்ன பாதகள நம்பிதெ தேவ ||அப||

எம்பத்து நாலு லக்ஷ யோனிய சீலகளலி பந்தெனோ
கும்பிணியொளு புட்டி பஹுபாபகள மாடி கும்பீபாகதி பெந்தெனோ
அம்புஜனாபனெ அகிள சுரரொடயனெ
ஆர்த்தார்திஹனெந்து கேளி பந்தெனு நானு ||1||

சேனினொளகெ பித்து நூணதந்தெ சதிசுத ஜனபாஷ பத்தனாதெ
மீனு மாம்ஸதாஸகொள்கி சிக்கிதந்தெ
மோச ஹோதெனோ பரிதெ
ஏணவு கிங்கிணித்வனிகெ மருளாதந்தெ
இளெயொளு முங்காதெனொ
ஏனெம்பெ தாசரி கோடகதந்ததி
குணியுவந்தெ நானெல்ல ஜனகள முந்தெ ||2||

காய போஷணகாகி ஹேய கர்மங்கள காலகாலதி மாட்தெனோ
ஜாயாதிகள ரக்ஷணெமாடெ ஆதரிந்த ஜாகரூகனாதெனோ
ந்யாய ரஹிதனாகி குரு ஹிரியர பாரபஜனெ மாடதெ போதேனொ
காயஜன்னையனெ ஶ்ரீகிருஷ்ணராயனெ
காயபேகென்ன பராதகளனு தேவ ||3|| -- ஶ்ரீவியாசராஜர்

சாமான்ய ஜீவிகள் இந்த உலகத்திற்கு வந்து, எப்படி எந்தவொரு சாதனையும் செய்யாமல், சம்சார சாகரத்தில் சிக்கி சுழல்கிறார்கள் என்னும் விஷயத்தை சொல்கிறார். இப்படி இருந்தால், சத்கதி அடைவது எப்படி / எப்போது என்று கேட்கிறார். பிறந்திருக்கும் அனைத்து ஜீவர்களின் கேள்வியும் இதுவே. ‘ஜேஜினொளகெ பித்த நொணதந்தெ’ நம் பிறவியும் ஆகியிருக்கிறது. தேக ஆரோக்கியத்திற்காக எதையெல்லாமோ செய்கிறோம். நம் இத்தகைய செயல்களை ராஜர் மிக அழகாக வர்ணித்திருக்கிறார்.

இதன் உள் அர்த்தத்தை தெளிவாக அறிந்து, அதன் தீர்வாக அவர் சொல்லும் உபதேசங்களைக் கேட்போம், கேட்டு அதன்படி நடப்போம். இறுதியில் 'காயபேகென்ன அபராதகளன்னு' என்போம்.

**ஆஸ்விஜ சுத்த அஷ்டமி**

**காலம் போய்க் கொண்டிருக்கிறது**

'கல யதீதி கால:' யாருக்கும் காத்திராமல் செல்வது காலம் எனப்படுகிறது. காலாந்தர்கத, கால நாமகனாக, கால நியாமகனானவன் ஸ்ரீஹரி. சர்வதந்த்ர ஸ்வதந்த்ரன். அனைவரைவிட சிறந்தவன். புருஷோத்தமன். ஆகவே காலத்தின் மகிமை யாருக்கும் தெரிவதில்லை. இந்த காலத்தைப் பற்றி ஹரிதாசர்கள் இதை நம்பிய சஜ்ஜனர்களுக்கு எச்சரித்து, ஆறுதல் வசனங்களை சொல்கின்றனர். ஸ்ரீவாதிராஜர் அக்கறையுடன் கூறிய வார்த்தைகளைக் கேட்டு அதன்படி நடக்க முயல்வோம்.

ஹோகுதிதெ ஹொத்து களெதெ வ்யர்த்தவாகி
ஹரிகுருகள நெனெயதெ
கெலஹொத்து ஹஸிவெ நித்ரெகளிந்தலி
கெலஹொத்து காகபோகர கதெகளிந்த
கெலஹொத்து பரவார்த்தி பரனிந்தெகளிந்த
காலவு கடெயாகி ஹரி நிம்மனர்ச்சிஸி
வேளெயில்லதெ ஹோயுத்த வஞ்சியாகி
சாலிஸி ஹோயிது ஈ விததி ஹொத்து
பாலிஸோ தயமாடி சிரிஹயவதன || -- ஸ்ரீவாதிராஜர்

இதே போன்ற இவரது இன்னொரு கிருதி. இப்படி பிறவியே வீணாயிற்று. இனியாவது எனக்கு ஞானத்தைக் கொடுத்து காப்பாற்று என்கிறார்.

ஹலவு ஜன்மகளலி பலு நொந்து பாயாரி
பளபளனெ திருகுதிஹெனோ
சலெ உதர போஷணெகெ தலெ ஹுளுகனாயந்தெ
ஹலவு மனெ அலெயுதிஹனொ
ஜலத மேலின குள்ளியந்திப்ப ஈ தேஹ
நெலெயிந்து நெச்சுதிஹனோ

ஜலஜனாபனெ நிம்ம மஹிமெயனு பொகளுவேனோ
சலுவ ஹயவதன காயோ தேவா || -- ஸ்ரீவாதிராஜர்

இவை பிறந்திருக்கும் அனைத்து ஜீவர்களுக்குமான சொல். ‘இன்னாதரு ஒள்ளே புத்தி ஹிடியோ பிராணி’ என்றதுபோல நாம் நடக்கவேண்டும்.

## ஆஸ்விஜ சுத்த நவமி
## குருபக்தியே முக்கிய சாதனை

’குருபிரசாதோ பலவான் ந தஸ்மாத் பலவத்தரம்’ - குருபக்தியே அதிக பலம் கொண்டது என்று ஸ்ருதி ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கே புரந்தரதாசர் ‘குருவின குலாம ஆகுவதனக தொரெயதண்ண முகுதி’ என்றார். ஏனெனில், ஞானம் பெறுவது, சத்கதி பெறுவது குருவிடமிருந்தே. ‘முகுந்த பக்த்யை குருபக்தி ஜாயை’. குருவிடம் செய்யும் பக்தியினால் மட்டுமே ஹரிபக்தி வரும். ஆகையால் குருபக்தியும், அதிலிருந்து கிடைக்கும் குரு பிரசாதமும் மிக முக்கியமானவை. குருபக்தியே முக்கிய சாதனை என்று விஜயதாசர் தம் சுளாதியில் தெரிவிக்கிறார்.

குருபகுதி ப்ரதானசாதன
குருசுஸ்ருஷவே மஹாகர்ம நாசன
குரு உபதேஷவே ஞானமார்க்க
குரு பிரசாத லிங்கபங்கக்கெ காரண பகுதி
குரு பரமானுக்ரஹ மாடிதடம்
நிருத பராவதத்வ ப்ரமேய
கரதளதொளகித்த தெரதிம்
அருஹுவாகுவுது மானவந்தெ
ஸ்வரூபயோக்யதாதனிது குருபகுதி
குருபல வந்தே இத்தடம்
தரெ எல்ல கெலவக்கு ஆவாகம்
குருகருண படதடம் தன்யனோ
குருத்யான மாள்பரு ஜனரு
குருசரணாப்ஜ ப்ருங்கனாகோ

குருகளிகெ சரிகாணேனோ
குருபொலிதொடெ சர்வவித்யா ப்ராப்தி
குருமந்த்ர குரோர்ஜப குரு நாம ஸ்மரணே
ஹிரிதாகி கைகொண்டு சுகிசுவரு ஜனரு
குரு பவாம்புதி தாடதனு
சிரி விஜயவிட்டல ராயனு
குருவில்லதவனிகெ பொலியனு || -- ஸ்ரீவிஜயதாசர்

தாசர், பரமகுருகளான ஸ்ரீமதாசார்யரைப் பற்றி சொல்லும்போது: 'மத்வ ராயர கருணா படெயதவ தரெயொளகெ இத்தரேனு, இல்லதித்தரேனு' என்று திட்டவட்டமாக சொல்கிறார்.

அபரோக்ஷி இல்லாத குருவானாலும், அவரை வணங்கி சத்கதி பெறவேண்டும் என்கிறார். குருவிடம் செய்த பக்தி என்றும் வீணாவதில்லை. 'ஸ்வோத்தமாகுவர ப்ரோக்ஷா:' ஞானத்தினால் சிறந்த இடத்தில் இருக்கும் அனைவரும் குரு என்று நினைக்கின்றார். தன்னைவிட மேலான ஆசிரமத்தில் இருப்பவர்கள் குரு என்று நினைக்கின்றார். இவர்கள் சாதாரண குரு என்றால், ஸ்வரூபத்தை மேம்படுத்தும் குரு – அசாதாரண குரு என்கிறார். தகுதிக்கேற்ப குருவின் அருள், சாபம் ஆகியவை கிடைக்கின்றன.

வரம், சாபங்களைக் கொடுக்க வல்ல குருவின் கருணை கிடைப்பது சுலபமல்ல என்று புரந்தரதாசர், அவரின் ஒரு உகாபோகத்தில் சொல்கிறார்.

குருகருணவாஹோது பரம துர்லபவய்யா
பரிபரிய வ்ரதகளனாசரிஸி பலவேனு
குருகருண ஒந்தல்லதெ கதி பேரே உண்டே
ஷரீரத புத்ரமித்ர களத்ராதி பாந்தவரு
நெரெ சலிசுவரெ சத்கதிகெ சாதனவ நிருததி
குருபாத நிஜவாகி மனதல்லரிது பஜிசலு
பரிபாலிசுவ நம்ம புரந்தரவிட்டலா ||

குருமுக்ய பிராணர் என்று கோபாலதாசர் வேண்டுவது இப்படி:

லாலிஸு யன்ன பின்ன பா பாலிஸி மனகெ தந்து |
குரு முக்யபிராண

...
சாதனவெம்போது நானா ஹாதியாகி தோருவுது ।
குரு முக்யபிராண
சாதிஸிதோரோ யனகெ ஆதாரயிதரொளகொந்து ।
குரு முக்யபிராண
கனவாகி ஹரிய திளுவோ குணவுபாஸனியாகெ ।
குரு முக்யபிராண

ஸ்ரீமதாசார்யரின் பரம்பரையில், எந்தவொரு சிறந்த செயல்களை துவக்கும்போதும், குருகளை, முந்தைய குருகளை, மூல குருகளை, ஸ்ரீஹரியை - தாரதம்யத்தின்படி நினைப்பது சம்பிரதாயமாக இருக்கிறது. இதையே பின்பற்றி குருவின் அருளைப் பெறவேண்டும். ஸ்ரீமதாசார்யர் தந்த்ரசாரத்தில் சொல்வது:

ஸ்ம்ருத்வாகுரும் பூர்வகுரும் ஆதிமூலகுரோஸ் ததா ।
தேவதாம் வாசுதேவம் ச வித்யாப்ய்யாசேது சித்திபாக் ॥

**ஆஸ்விஜ சுத்த தசமி**

**அனைவரிலும் ஸ்ரீஹரி**

ஜீவ, ஜடாத்மக ஜீவரில் அணுரேணு-த்ருணகாஷ்டனாக நிலைத்திருக்கும் ஸ்ரீஹரி அனைத்து ஜீவரின் பிம்பமூர்த்தியிலும் இருக்கிறான். ஜீவர்களில் இருந்து, அவர்களினால் அனைத்து செயல்களையும் செய்து, செய்வித்து, ஜீவர்களுக்கு சுக துக்கங்களைக் கொடுத்து, சஜ்ஜீவிகளிடமிருந்து அனைத்து பூஜைகளையும் ஏற்றுக்கொண்டு, இறுதியில் அதற்கேற்ப பலன்களை கொடுப்பவன் அவனே ஆகியிருக்கிறான்.

ஸ்ரீகோபாலதாசர் இதன் பொருளையே இந்தப் பாடலில் சொல்கிறார்.

சிரியல்லியு நீனே பரமேஷ்டியல்லியு நீனே
மருத வாணி பாரதி எல்லரல்லியு நீனே
உரகனல்லியு நீனே கருடனல்லியு நீனே
கிரஜாபதியல்லியு சுரபதியல்லியு நீனே
வரசித்த சாத்ய கின்னரரல்லியு நீனே

கிரிகுஹெகளல்லி ஔகெ ஹொரகெ எல்லா
கரெதரெ ஓ எம்ப ப்ரதிஷப்தவு நீனே
பரசுராமனாகி பாவகனலி நீனே
பஹிரந்தர்கச திக்குகளல்லி நீனே நோடலு
கரிசிம்ஹசார்தூல மொதலாத
ஸருவ ஜீவரலி பரிபூர்ண நீனே
மரம்ருக மொதலாத ஆகிளரல்லியு நீனே
கர்மானுசாரவாத மஷ்டரந்தக நீனே
துரவிக்ரம நம்ம கோபாலவிட்டல
தூர தூர அதிதூரதரனு நீனே அந்தி காந்திக நீனே ||

அனைவரிலும் இருக்கும் ஸ்ரீஹரியின் சிறப்பு விளக்கமுடியாதது. அனைத்து இடங்களிலும் இருக்கும் ஸ்ரீஹரியை அறிந்து, செய்த செயல்களை தன்னிடமிருந்து பெற்று தனக்கு பலன்களைக் கொடுப்பவன் என்று தாசர் வர்ணிக்கிறார். 'ஔஹொர கொந்தாகோ தனக' 'அந்தர்பஹிஸ்ச தத் சர்வம் வியாப்த நாராயண ஸ்தித:' என்பதுபோல அனைத்து ஜீவர்களின் இதய-கமலத்தில் நிலைத்திருக்கும் ஸ்ரீஹரியும் ஒன்றே என்று நினைத்து தன்யர் ஆகவேண்டும்.

**ஆஸ்விஜ சுத்த ஏகாதசி**

**எதற்கு பயம்?**

ஸ்ரீகிருஷ்ணன் சொன்னது:
அனன்யாஸ் சிந்தயந்தோ மாம் யே ஜனா: பர்யுபாஸதே |
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோக க்ஷேமம் வஹாம்யஹம் ||

ஜீவர்களை உலகில் படைத்த ஸ்ரீஹரியே கூறியது இது. பயமில்லாமல் இருங்கள். அனைத்து ஜீவ ஜடங்களில் அந்தர்யாமியாக இருந்து, அவர்களை வழி நடத்துபவனான ஸ்ரீஹரி கூறிய ஆறுதல் வார்த்தை அது. ஸ்ரீஹரியை நம்பிய பக்தர்களை என்றைக்கும் கைவிடமாட்டான் என்று தாசர் கூறுவது.

நானேக படவனு நானேக பரதேசி |
ஸ்ரீநிதி ஹரியெனகெ நீனிருவ தனக ||

மேலும்:
வித்யெ ஹேளுவ நீனே புத்தி கலிசுவ நீனே
உத்தாரகர்ம மம ஸ்வாமி நீனே
முத்து ஸ்ரீபுரந்தரவிட்டல நின்னடி மேலே
பித்து கொண்டிருவனிகெ ஏதர பயவோ? || -- ஸ்ரீபுரந்தரதாசர்

'ந மே பக்த: ப்ரணஷ்யதி' பக்தன் என்றும் தோற்கமாட்டான் என்றார். அதற்கு, பக்தன் சொல்வது இப்படி.

நா நின்ன த்யானதொளிரலு மிக்க
ஹீன மானவரேனு மாடுவரோ ரங்க |
மச்சரிசுவரெல்ல கூடி மாடுவுதேனு ||

ஸ்ரீபுரந்தரதாசர் 'சகல க்ரஹபல நீனே' என்றார். மேலும்:

பலவு பலவே நின்ன பலவல்லதே மிக்க
பலகளுண்டே பணகு க்ரஹகளிந்த || என்று, எதற்கு பயம் என்று கேட்கிறார்.

ஸ்ரீவியாசராஜரின் ஆறுதல் வார்த்தை இது:

ஹரி நாம ஹரிபத தீரதவிரலு
ஹரிதின ஹரிதாசர பாதரஜவிரலு
ஹரிதத பயவ்யாகெ நரகத பீத்யாகெ
துரிதத பயவெ கேஷரிய இக்கெயொளத்தவகெ
கரிய பயவுண்டே ஸ்ரீகிருஷ்ணன தாசர சங்கவிரலு
துரித திமிரக்கெ தரணி தானல்லவே ||

**ஆஸ்விஜ சுத்த த்வாதசி**
**ஆயுள் வீணாகாமல் இருக்கட்டும்**

தாஸூ பாரிசுதிதெ கேளி ஹரிதாசரெல்ல |
ஸ்ரீஷன பஜனெய மாடதெ மனுஜன
ஆயுஷ்ய வியர்த்தவு ஹோயிது எந்து || -- ஸ்ரீபுரந்தரதாசர்

காலம் யாருக்காகவும் காத்திருக்காது. யாரிடமும் அதற்கு பயமில்லை. போன காலம் மறுபடி திரும்பி வராது. காலத்தை நியமித்து, நிர்வகித்து, மூன்று காலங்களிலும் நிலைத்திருப்பவன் ஸ்ரீஹரியே. விலைமதிப்பற்ற காலம் போய்க் கொண்டிருக்கிறதென்றால், நம் ஆயுள் குறைகிறது என்று பொருள்.

ஆயுள் எப்போது வீணாகிறது என்று ஸ்ரீபாதராஜர் சொல்கிறார்.
வியர்த்தவல்லவே ஜென்ம வியர்த்தவல்லவே
தீர்த்தபாதர பஜிஸி க்ருதார்தனாகதவன ஜென்ம ||
...
ஜங்கமரொளகதிகவெனிப பங்குவ மனுஷ்யதேஹ படெது
ரங்கவிட்டலனெனிப பஸ்சிம ரங்ககர்பிஸதவன ஜென்ம || என்றார்.

வாழ்க்கையில் விரக்தி பெற்று நமக்காக ஸ்ரீவியாசராஜர் கூறியது:

ஹிந்தின காலவ வியர்த்தவாகி களெதெனோ
முந்தின கதி சிந்தெ லேஷவில்லவோ |
சந்து ஹோயிது தேஹதொளகின பலவெல்ல
மந்தவாதவு இந்திரிய கதிகளெல்லா ||

வாழ்க்கை வீணாகாமல் இருக்க, ஸ்ரீபுரந்தரதாசர் கூறியது இது. உடன், சாதனைக்கான வழியையும் சொல்கிறார். இவை அனைத்தும் நம் மனதில் நிலைக்கவேண்டும்.

ஏனு பந்தெனோ ஜீவன வியர்த்தவாகி
தானவ மாடலில்ல தர்மவ மாடலில்ல
தீன நுடிகளில்ல தாக்ஷிண்யவில்ல
ஞானி ஜனரா சங்கதொளிரலில்ல
மனவு நிர்மலதி க்ஷணவு இரலில்ல
சதிசுதரு சந்தோஷதிந்திரலில்ல
ஷ்ருதிபுராணகளனு கிவிகொட்டு கேளலில்ல
ம்ருதிகால பந்து தின வியர்த்த ஹோயிதல்லா ||

**ஆஸ்விஜ சுத்த த்ரயோதசி**

**கெட்டவள் யார்?**

எந்தவொரு குடும்பமும் சுகமாக வாழ, குடும்பத்தினர் அனைவரும் ஒருமனதாக இருக்கவேண்டும். பகவத் பக்தர்களாக, மற்றவர்களுக்கு உதவுபவர்களாக இருக்கவேண்டும். இதில் பெண்களின் பங்கு முக்கியமானது. ஆண் பெண் என இருவருக்கும் பெருமை சேர்க்கும் பெண்ணானவள், குடும்பத்தை நல்லமுறையில் நடத்துபவளாகவும் இருக்கிறாள். துஷ்ட குணமுள்ள ஒரு பெண் எப்படி இருப்பாள் என்பதை ஸ்ரீவிஜயதாசர் ஒரு சுளாதியில் தெரிவிக்கிறார். விசேஷமாக அத்தகைய பெண்ணின் குணங்களின் பட்டியலையே கொடுத்து, அப்படி இருக்காதீர்கள் என நம்மை எச்சரிக்கிறார்.

பங்க்தியொளகெ பேத மாடுவளெ ஹொலதி
வந்து வாஷெயா இடுவவளெ ஹொலதி
நிந்தல்லி மனெவார்த்தெ பேளுவவளெ ஹொலதி
சந்தத ஷுசி இல்லதவளெ ஹொலதி
காந்தகஞ்சதவளெ மஹா ஹொலதி
மந்த்ர உபதேசவில்லதவளே ஹொலதி
சிந்திஸி பரரிகெ குதிவளெ ஹொலதி
ஷாந்தமூருதி நம்ம விஜயவிட்டல ஹரிய
சந்தத நெனெயதவளெ ஹொலதி ||

இப்படியே துஷ்ட பெண்கள், கெட்ட காரியங்களில் எப்படி ஈடுபடுகிறார்கள் என்று கூறுகிறார்.

ரக்கசாந்தக நம்ம விஜயவிட்டல ஹரிய
பக்தரல்லி த்வேஷ மாடுவளே ஹொலதி |
இத்து இல்லெந்து நுடிவவளெ ஹொலதி
சித்தவாகித்துவ கெடிசுவவளெ ஹொலதி
முத்ராங்கித இல்லதவளெ ஹொலதி
புத்தி ஸ்திர இல்லவவளு ஹொலதி
வைஷ்ணவ ஞான அரியதவளெ ஹொலதி
சிஷ்டாசார பிட்டவளெ ஹொலதி

கெட்டவர சங்கட திருகுவவளெ ஹொலதி
நிஷ்டர வசனவ ஆடுவவளெ ஹொலதி
புட்டத மனெகெ அபகீர்தி தருவளெ ஹொலதி
சந்ததவெஸகித கர்ம தன்ன பதிய
காந்த விஜயவிட்டல கேயதவளே ஹொலதி ||

**ஆஸ்விஜ சுத்த சதுர்தசி**

**கெட்டவன் யார்?**

'சித்த சுத்தி இல்லதவகெ பரலோக உண்டே' என்று கேட்கிறார் கனகதாசர். அதாவது நித்ய சுகத்திற்கு மனத்தூய்மை அவசியம். ஆகவே, தவறான குணங்களைக் கொண்டவன் 'ஹொலெய - கெட்டவன்' என அழைக்கப்படுகிறான். இத்தகையவர்களின் லட்சணங்களை சொல்லி என்றும் இது போன்று இருக்காதீர்கள் என்கிறார்.

ஹொலெய பந்தானெந்து ஔகெ தேவர மாடி
கணகண கண்டெய பாரிசுவரய்ய
தனுவின கோப ஹொலெயல்ல வேனய்யா
மனசின வஞ்சனெ ஹொலெயல்லவேனய்யா
இந்தா ஹொரகித்தா ஹொலெயன்னு ஔகெ தும்பிட்டுகொண்டு
இதகேனு மத்தோ ஶ்ரீபுரந்தரவிட்டலா ||

இதற்காக ஶ்ரீவிஜயதாசர் ஒரு சுளாதியையே இயற்றியிருக்கிறார். தவிர்க்கவேண்டிய குணங்களை பட்டியலிடுகிறார். இதன் பொருளைப் புரிந்து, நடைமுறைக்கு கொண்டுவந்தால் அதுவே சரியான செயலாகும்.

ஹொலெயனாவனு ஈ கலியுகதொளகெ
நிஸ்சலவாகி திளிவது சுலப மானவரு |
நிர்மலவாகி கோபவ களெயலரியதவ ஹொலெய
அனாசாரி ஹொலெய
குலகேடியாகி வம்சாவளிய கெடிசுவவ ஹொலெய
அன்னதானவன்னு மாடிதித்தவ ஹொலெய
ஹெண்ணின பண்ணக்கெ சோலுவவ ஹொலெய

தன்ன பராக்ரம பெளிகொம்புவ ஹொலெய
மன்னணெ மாடிதரெ ஹிக்குவவ ஹொலெய
அவசரதொளகெ கை பிடுவவனெ ஹொலெய
சிவனு தானெந்து பேளுவனு தாமஸ ஹொலெய
ரவியு மூடிதரு மலகிப்பனே ஹொலெய
ஜீவன பீதியகேளி எச்சரகொள்ளதவ ஹொலெய
நவவித த்வேஷவ தாள்தவனெ ஹொலெய
சதிபதிகெ பேதவிக்குவனெ ஹொலெய
பித்ருமாத்ரு குருகள ப்ருதவனெ ஹொலெய
ஹிதமாடிதவரிகெ ப்ரதிகூலனு ஹொலெய
பிசஜனாபன திவச மாடதித்தவ ஹொலெய
ரச ருஜ பிடுவ விரத மாடதித்தவ ஹொலெய

## ஆஸ்விஜ பௌர்ணமி

## மகாலட்சுமி பூஜை

அனாதி காலத்திலிருந்து ஶ்ரீஹரியுடனே இருக்கும் மகாலட்சுமி, நித்யமுக்தள். அனைத்து தேவதைகளாலும் புகழப்பட்டு, வேதாங்கங்களை அறிந்து, அக்ஷரபுருஷள் என்று அழைக்கப்பட்டு, அனைத்து ஜீவகோடிகளுக்கும் நியாகமள் (காப்பவள்) என்று அழைக்கப்படுபவர். குணத்தில் ஶ்ரீவிஷ்ணுவிற்கு குறைந்தவள் ஆகையால், அவரையே நிரந்தரமாக வணங்கி வருபவள் மகாலட்சுமி. தாச சாகித்யத்தில் ரமாதேவியைப் பற்றி பல பாடல்கள் இருக்கின்றன. ஓரிரண்டைப் பார்க்கலாம்.

தோடி ராகம். ஆதி தாளம்.

க்ஷீரவாரதிகன்னிகெ மூரஜனகெ ।
ஈரேளு லோக நாயிகெ ||ப||

வாரவாரக்கெ ஆராதிபுதகெ
சாருமதிய கொடு தூர நோடதலெ ||அப||

ஶ்ரீதரா துர்கி அம்ப்ரிணி நித்யகல்யாணி
வேதவதியெ ருக்மிணி ।
வேத வேதாந்ததபிமானி வாரிஜ ராணி

ஆதி மத்யந்த குணமணி ।
சாது ஜனர ஹ்ருன்மந்திர வாசினி
பேதகொளிப காம க்ரோதகளோடிஸி ।
நீ தயதிந்தலெ முந்தெ கதிகெ பஞ்ச
பேத யதிய கொடு மாடவ ப்ரேமளெ ||1||

ஶ்ரீமாயா ஜயா க்ருதி ஷாந்திதேவி ஜயந்தெ
நானு தொளிப்ப குணவந்தெ ।
கோமலவாத வைஜயந்தெ, தரிசித ஷாந்தெ
சோமார்க கோடிமிகெ காந்தெ ।
தாமர சாம்பகெ ரமெ லகுமி சத்ய
பாமெ பவாரண்ய தூமகேதளெ ।
யாமயாமக்கெ ஹரி
நாமவ நுடிஸி உத்தமரொடனெ பரிணாமவனீயத ||2||

அனேகாபரண பூஷிதெ தரணி ஜாதெ
ஞானிகள மனோப்ரீதே ।
ஆனந்த லீலெ விக்யாதே ஆதிதேவதெ
கானவிலோலெ சுரனுதே ।
நீனே கதி எனகாரன காணெனெ
தானி இந்திராதேவி நானா பரியலி
ஶ்ரீநிதி விஜயவிட்டலன மூருதிய
த்யான தொளிடுவந்த ஞான பக்தி கொடு ||

இந்தப் பாடலில், மகாலட்சுமியின் அனுபவங்களை தாசர் அழகாக தொகுத்து வழங்குகிறார். ஶ்ரீமதாசார்யர், மகாலட்சுமியை 'தேவி பாக்யாத்மிகா ந்ருணாம்' அனைவரின் பாக்ய தேவதை இவளே என்கிறார். ஶ்ரீஹரிக்கு அடுத்த இடத்தில் இருக்கும் லட்சுமி - பிரம்மா, சிவன், இந்திரன் ஆகிய அனைத்து தேவதைகளாலும் வணங்கப்படுபவள். ஶ்ரீ, பூ, துர்கா ரூபங்களினால் சத்ய ரஜஸ் தமோ குணங்களுக்கு அபிமானினியாக இருக்கிறாள். புரந்தரதாசர் சொல்வது:

ஏனு தன்யளோ லகுமி எந்தா மான்யளோ
சானுராகதிந்த ஹரிய தானே சேவெ மாடுதிஹளு || என்றார்.

அவ்யக்த தத்வத்தின் அபிமானி, அப்ராக்ருத ப்ரக்ருதியை காப்பாற்றுபவள், பிரம்மாதிகளால் ஸ்ருஷ்டிகளை செய்பவள். ஞானகாரியங்களை ஸ்ரீஹரியுடன் சேர்ந்து நடத்துபவள். ஸ்ரீஹரியுடனே அவதரிப்பவள். வைகுண்டத்திலும் அனைத்து இடங்களிலும், ஸ்ரீஹரியை சேவிப்பவள்.

ஸ்ரீவாதிராஜர், லட்சுமி சோபானேவில் மகாலட்சுமியை பூரணமாக வர்ணித்திருக்கிறார். இங்கு லட்சுமியை, தேவோத்தமள் என்று சொல்கிறார்.
நமஸ்தே விமலே கோமலே ரமாதேவி நமஸ்தே நமஸ்தே |
தனதான்யவித்து மர்த்யர பொரெவெ எந்தெந்து |

கனகதாசர்:
க்ஷீரார்ணவகன்யெ கமனீய மூர்தியெ நாராயணனுரஷ்சஹ்னெ |
ஓரந்தெ சகலேஷ்சர்ய சம்பன்ன மத்பார நின்னுது சுப்ரசன்னெ |

நித்ய முக்தளெ நிர்விகாரளெ
நித்யசுகசம்பூர்ணே நித்யா
நித்யஜகதாதாரே முக்தாமுக்த கணவினுதே |
சித்தயிசு பின்னபவ ஸ்ரீபுரு
ஷோத்தமன வக்ஷோனிவாசினி
ப்ருத்யவர்கவ காயே த்ரிஜகன்மாயே விக்யாதே || ஜகன்னாததாசர்:

பிரசன்னவெங்கட தாசர்:
வித்யா புத்தியனித்து மத்வேஷ பதத்யான |
பத்தன்ன மாடென்ன முத்து ரமாதேவி ||

பாக்யத லட்சுமி பாரம்மா நம்மம்ம நீ
சௌபாக்யத லட்சுமி பாரம்மா || -- புரந்தரதாசர்:
என்று நம்மிடம் வருமாறு லட்சுமிதேவியை அழைக்கிறார்.

**ஆஸ்விஜ பகுள ப்ரதமை**
**பயப்படாமல் பிறவிக்கடலைத் தாண்டு**

ஹரிதாசரெம்ப நெரவில்லதெ
ஹரிசேவெயெம்ப பத காணதெ

ஹரிபதவெம்ப ஜனும பூமிய பரிது |
தூரதலி தப்பீக காணதலெ
மருளாதெ பயாடவியலி
சிரிபதி நின்ன சேரிஸோ சிரிகிருஷ்ண || -- ஸ்ரீவியாஸராஜர்

சம்சார சாகரத்தில் மூழ்கித் தவிக்கும் அனைவரின் நிலையும் இதுவே. பிறவிக்கடலைத் தாண்டுவதற்கான தீர்வு தெரியவில்லை. தெரிந்துகொள்ளும் முயற்சியும் யாரும் எடுப்பதில்லை. அதற்கே ராஜர், இதற்கான தீர்வுகளை நமக்காக தெரிவித்து பட்டியலிட்டிருக்கிறார். ‘சிரிபதி நின்ன சேரிரோ’ என்று கேட்கிறார். வாழ்க்கையில் ஹரிதாசர்களின் நட்பு இல்லாமல், குருகளின் கருணை இல்லாமல், எதையும் சாதிக்க முடியாது என்கிறார். இதற்கும் ஸ்ரீஹரியிடமே வேண்டவேண்டும். இந்த வேலையை ராஜரின் சிஷ்யரான இன்னொரு சிஷ்யர் (ஸ்ரீவாதிராஜர்) ஸ்ரீஹரியிடம் வேண்டும் விதத்தை பார்க்கலாம்.

நின்ன த்யானவ பக்திய கொடு
அன்யரலி விரக்திய கொடு
நின்ன நோடுவ முக்திய கொடு
நின்ன பாடுவ பக்திய கொடு
நின்னலி பவ சம்பத்திய கொடு
சித்ரதத்வத க்ருத்யவ கொடு
மத்தெ துதியலி எனகெ முக்திய கொடு
அத்தத்த மாடு பவகத்தலெ எனகெ
முத்ததெ ஹயவதன ||

இந்த சம்சார சாகரத்திலிருந்து தப்புவதற்கு என்னவெல்லாம் செய்யவேண்டும், பிறகு ஹயவதனனையும் வேண்ட வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். இங்கு தேவையான ஞான பக்தி வைராக்கியங்களை கொடுப்பவன் அவனே ஆகையால் அவனையே வேண்டுங்கள் என்றார். இந்த இரு ராஜர்களின் வாக்குகளை பின்பற்றி தன்யர் ஆவோமாக.

## ஆஸ்விஜ பகுள த்விதியை செய்யக்கூடாதவைகளின் பட்டியல்

கைமீறி ஹோதமாதிகெ ஹுடுகாடபாரது |
மாது கேளத மக்கள ஹெஸரு தெகெயபாரது
தன்ன ப்ரீதியில்லத பதிய கண்டு ஹிக்கபாரது ||1||

சாரத்வ மாடோ பதிய கூடி அளபாரது
வைரத்வ மாள்பர சோல்லு கேளபாரது ||2||
துஷ்ட கர்கஸி ஸ்த்ரீயள ஹெசரு தெகெயபாரது
ஹத்து மந்திகஞ்சததன ஸ்னேஹிசபாரது ||3||

பங்க்தியலி பரபங்க்தி மாடபாரது
மங்கு ஜீவனாகி முக்தி பேடபாரது ||4||
ஆசார ஹீனன மனெயொளுட மாடபாரது
விசார இல்லத சபெயொளு கூடபாரது ||5||

பரபுருஷரித்தெடெ ஒப்பளிரலு பாரது
புரந்தரவிட்டல த்யான மரெயபாரது ||6||

மனிதனுக்கு சுகவாழ்க்கையே வேண்டும். இதற்கே தேவையான பட்டியல் இருந்தால் நல்லது என்போர் பலர். ஆனால் இதனுடன், தேவையில்லாத / செய்யக் கூடாதவைகளின் பட்டியலும் இருக்கவேண்டும் என்று தாசர் சொல்கிறார். மேற்கண்ட பாடலில் தாசரின் வாக்கு எவ்வளவு எளிமை. ஆனால் அவற்றை பின்பற்றுவது அவ்வளவு கடினம். இங்கு தாசர், எந்தெந்த பழக்கங்களை பின்பற்றக் கூடாது என்று சொல்கிறார். நான் சுகமாக இருக்க, நம்முடன் இருப்பவர்களை சுகமாக வைத்திருக்க, சமூகத்திற்கு சுகத்தினைக் கொடுக்க, இந்த அனைத்து தகவல்களையும் வாழ்க்கையில் பின்பற்ற வேண்டும். இவையே நம் கட்டுப்பாடுகள் என்று சொன்னாலும் அது சரியே. பொதுவாக அனைவரின் அனுபவத்திலும் காணப்படும் செயல்களையே தாசர் இங்கு சொல்லியிருக்கிறார். இவற்றை உணர்ந்து களைந்தால், அனைவரின் வாழ்வும் பிரகாசமாகும் என்பது நிஜம். இப்படியே தாசர் அவரின் கிருதிகளில் பற்பல இடங்களில் ஆறுதல்

வசனங்களைப் பாடி, மக்களிடன் தானே போய் போதித்திருப்பதைக் காண்கிறோம். இதில் ஒவ்வொரு சொல்லும் சுவாரசியமானதாகும். ‘மங்கு ஜீவனாகி’ என்றால் எதையும் அறியாமல் அல்லது எதையும் பொருட்படுத்தாமல் இருக்கக்கூடாது என்கிறார். இவை அனைத்தின் பொருளான / சாரமான ஸ்ரீஹரியின் பஜனை, கீர்த்தனை, ஸ்மரணை, தியானம் ஆகியவற்றை மறக்கக்கூடாது என்கிறார்.

**ஆஸ்விஜ பகுள த்ருதியை**
**அனைத்தும் அவன் ஆணையின்படி**

வாழ்க்கையின் அ-ஸ்வாதந்த்ர்யத்தை ஹரிதாசர் மிகவும் தெளிவாக எளிமையாக விளக்கியிருப்பதை இங்கு பார்க்கலாம்.

நீனே கர்தனு அகர்தரு சிரி அஜபவேந்த்ராத்யமரரு
நீனே ஸ்வதந்த்ர அஸ்வதந்த்ரரமரு, நீனே சர்வாத்மனாகி ஸ்வீகரிசுவவ
ஞான நின்னாதீன கர்ம நின்னாதீன அனாதிகாலதி இருவ ஜீவரிகெ
நீனே சுகவனீவே நீனே துக்கவனீவே
ஜீவ கர்ம அஞ்ஞான அனாதிகளு நின்னாதீனவய்யா
அனாதிகர்ம நீனே புரந்தரவிட்டலா
நீனே சலஹோ நின்னடிய பொந்திதவர ॥ -- ஸ்ரீபுரந்தரதாசர்

வாழ்க்கையைப் பற்றி பிரசன்னவேங்கட தாசர் இவ்வாறு கூறுகிறார்.

நெனெவெ என்னொளகெ நிந்து ஆடிசுவி
நானொந்தரியனெலோ நானெம்புவுதொந்தெ
நீனித திளிசலு நீ நுடிதத்தெ நுடிதெ
அனு பல்லெனு ஆனந்த சின்மயனெ மாணவெ ப்ரசன்ன வேங்கடவிட்டலா
நீனின்ன பிடியலு நின்ன ஹைகெ பந்தந்தெ ॥

அனைவரின் அனுபவத்திற்கு வந்ததையே கோபாலதாசர் இங்கு சொல்கிறார்.

நீனு புட்டிஸலு புட்டுவ ஜீவ நானய்யா
நீனு போஷிசலு போஷிசிகொண்பெ நானய்யா
நீனு சலிசலு சலிசுவெனய்யா நானு
நீனு தடஹலு தடஹவெனய்யா நானு
நீனு நுடிசலு நுடிவுது நாலிகெ
நீனு வியாப்தனு ஸ்தூலஸூக்ஷ்ம தேஹகளல்லி
நீனு கர்த போக்த நீனே ஆதாரனு
நீனெ நேமிஸிதந்தெ லாப நஷ்டங்களு
நீனே சர்வசராசர ப்ரேரக நீனே
நீனே சத்வந்த்ராஸ்வதந்த்ர ஸ்வப்ரகார
நீனே வியாபக சர்வ ஜீவஜகத்தினல்லி
நீனே நீனே நீனே கோபாலவிட்டலா ||

**ஆஸ்விஜ பகுள சதுர்த்தி**
**கோபாலவிட்டலன் காப்பாற்றுவான்**

'நிமகெ பேளுவேனு சுகசரித' என்கிறார் கோபாலதாசர்.

நானா ஜீவர யோக்யதானுசார |
தன்னதீனவாத பலவனித்து பொரெவுவா ||
ஹரி இச்சே பந்தகா ஹரி இச்சே மோசகா |
அரிது ஹீகெ பிடதெ ஹரியன்னெ மரிஹோகு ||
ஸ்வதந்த்ரனெம்போ அதந்த்ரகெ இது பெச்செ |
அத்யந்த தணிசுவ பரதந்த்ர ஸ்ரீஹரியு ||
யல்லா ஜீவரிகு தா ஈஷ தன்ன |
பல்லந்தெ அவரவர போப்யா யிவகெ
எல்லவு வைபவ்ய லேஷா | வந்தே யல்லாவெம்பவகெ காணிஸா ||
சஜ்ஜனர சங்கவ மாடு துஷ்ட துர்ஜனர சங்க நீ பிடு
தாரதம்யானுசார ஹரிய பக்தருகள
அரிது குணிஸி நித்ய பரிவாரதொடியனா
அர்ப்பணெ பகெ முச்சி அரியோ நின்ன தர்பகோபகளெல்லா மரியோ
கந்தர்பனய்யனங்க்ரி தோர்ப்பவரூடகொடு ||
ஹரியன்னே நெனெதவ நெரதவ கெத்தவ

ஹரியன்னே மரதன நிரய பித்தவ ||
கனஸினொளகெ சஹித மனசாத பாபக்கெ
கன ப்ராயஸ்சித்தவு குணிஸி நீ ஹரியென்னே ||
ஹரி கருண நினகாகெ | நின்ன தாரித்ரவெல்ல ஹொரகெ ||
ஹ்யாங்கே ஈக ஹரிய நீ திளிவி | நித்ய ஹாகாகெ நீனு பாளுவி |
அபிமானவெந்தோது க்லேஷ | நினகெ சுபவெந்து தோரது லேசா |
ஞானக்கெ சாதன ஸ்ரவண | ஜன்யஞானதிந்தாகோது நிஜ ஞானா |
ஹா ஹா
ஞான பகுதி விரக்தியெ முகுதி சா
தனதல்லாதெ ப்யாரெ காணெனு நினகொந்து |
குப்தனாகி ஹரித்யாப்திஸி நின்னொளு | ஆப்தனாகி நிஜ ப்ராப்தி பலவனீவா |
ஆவாவ கா்ம நீ மாடு | அல்லி
மேவா ஸ்ரீமூர்த்திய நோடு | ஹரி
காவத நீனெந்து ஆடு | வாயுதேவன்ன நீ பல மாடு | ஹா ஹா
ஸ்ரீவல்லப நம்ம கோபாலவிட்டல தன்ன
வானெந்து யெத்தி பாவன்ன மாடுவ || -- ஸ்ரீகோபாலதாசர்

**ஆஸ்விஜ பகுள பஞ்சமி**

**ராமகிருஷ்ண ஜெபம்**

ஹரேராம ஹரேராம ராமராம ஹரேஹரே |
ஹரேகிருஷ்ண ஹரேகிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரேஹரே |

ஹரி - அனைவரையும் காப்பவன். கிருஷ்ண - அனைவருக்கும் ஞானத்தைக் கொடுப்பவன். ராம - அனைவருக்கும் மகிழ்ச்சியைக் கொடுப்பவன். ஸ்ரீஹரியின் அனைத்து ரூபங்களும் ஒன்றே. அனைத்தும் அனைத்தையும் செய்யும், கொடுக்கும் ரூபங்களே. இந்த மந்திரம் தாரக மந்திரம். ஆண் பெண்கள் இருவரும் ஜெபிக்கவேண்டிய மந்திரம். அனைத்து பாவங்களையும் களைந்து, அனைத்து விருப்பங்களையும் நிறைவேற்றும் மந்திரம்.

இந்த மந்திரத்தில் பிரார்த்தனை இல்லை. வெறும் அவனை அழைக்கும் பேர்களே உள்ளன. ஸ்ரீஹரியின் பெயர்களே உள்ளன. ஸ்ரீஹரி அவன் பெயர்களை மட்டும் சொல்வதினாலேயே, நம்

அனைத்து விருப்பங்களையும் நிறைவேற்றுவான். அவன் சர்வக்ஞன். சர்வோத்தமன். சர்வதந்த்ர ஸ்வதந்த்ரன். அனைத்திற்கும் மேற்பட்டு கருணாமயி. சிறிய குழந்தை அம்மா என்று அழைத்தால், தாயானவள் குழந்தையின் தேவைகளை ஓடி வந்து நிறைவேற்றுவதைப் போல, ஸ்ரீஹரி எந்தவொரு எதிர்பார்ப்பும் இல்லாமல், பக்தனின் மனதைப் புரிந்து, அதை நிறைவேற்றும் கருணாபூர்ணன்.

'மனவசனகதிதூர நெனெவரனனுஸரிஸி திருகுவனு' என்ற ஜகன்னாததாசர் இன்னொரு இடத்தில் கூறுவது:

ஹிந்தே முந்தெடபலதி ஔஔரகெ
இந்திரேஷனு தன்னவர நென்
தெந்து சலஹுவ நாகசதவோலெத்த நோடிதரு ||

நம்மை பூமிக்குத் தருவித்தவன் அவனே. இந்த உடல், பிறவி கொடுத்தவன் அவனே. நம்மிடமிருந்து சாதனைகளை செய்விப்பவன் அவனே. ஒவ்வொரு நொடியும், நம்மை காப்பாற்றுபவனும் அவனே. நமக்கு ஞானம், ஆயுள், ஆரோக்யம், செல்வம் என அனைத்தையும் வழங்குபவன் அவனே. நம்மிடம் நற்காரியங்களை செய்வித்து, பலன்களைக் கொடுப்பவன் அவனே. தந்தை தாய், உற்றார் உறவினர் நண்பர் என அனைத்துமாகி இறுதியில் சத்கதியைக் கொடுப்பவனும் அவனே. அப்படியெனில் அவன் எத்தகைய கருணாளு?. நம்முடையது என்று எதுவும் இல்லை. அனைத்தும் அவனுடையதே ஆனாலும், நம்மிடமிருந்து மிகச்சிறிய அளவில் செய்வித்து, அதை பலமடங்காகத் திருப்பிக் கொடுக்கிறான். அதற்கே 'அவன காருண்யகேனெம்பே' என்றார் தாசர். இந்த ராமகிருஷ்ண மந்திரம் நம் உயிர்மூச்சு ஆகவேண்டும். எந்நேரமும் நம் நாக்கில் நிலைத்திருக்க வேண்டும். நடு இரவில் முழிப்பு வந்தாலும், தானாக வாயில் இந்த மந்திரம் வரவேண்டும். 'சந்ததம் சிந்தயேதனந்தம் அந்தகாலே விசேஷத:' - இது ஸ்ரீமதாசார்யரின் வாக்கு.

## ஆஸ்விஜ பகுள சஷ்டி
## சிந்தனை எப்படி இருக்கவேண்டும்?

மனிதனின் வாழ்க்கையில் ஏதாவது ஒரு நல்லது நடந்தால் - அது தன் திறமையினால் நடந்தது என்றும்; ஏதாவது ஒரு துக்கம் நடந்தால் - அது வினைப்பயன் என்றும் பழிபோடுவது வழக்கம். ஸ்ரீஹரியின் விருப்பமே ஆனாலும், இரண்டுமே நம் வினைப்பயனாலே நடந்தது என்று அறியவேண்டும். இங்கு தாசர் நம் சிந்தனை எப்படி இருக்கவேண்டும் என்று சொல்கிறார்.

ஆவ சுக்ருதவோ மத்தாவ குருகள தயவோ
ஆவாவ கோத்ரதலி உத்பவிஸித பலவோ
ஆவ புத்ரனு சத்கர்மமாடித புண்யவோ
ஆவ நிஜராணி நடகொண்ட பகெயோ
ஆவ சுஜன ப்ராம்மணரு ஹரிஸித ஹரகேயோ
ஆவ பாந்தவனு பேளிகொட்ட மார்கவோ
ஆவ க்ஷேத்ரதலி மாடித சாதனவோ
ஆவ தாத்விகரு ப்ரேரிசித (ஹரிஸித) பாக்யவோ
ஆவாவது எனகெ ஒந்தாதரு திளியது
பாவஞரு பல்லரு ஸ்திதிகதிய
ஈ உடபின யாத்ரெ மாடுவ கோசுக
பாவமானிய மததல்லி பொந்தி நித்ய
பாவனனாகி நடெதந்தவர சௌபாக்ய || --ஸ்ரீவிஜயதாசர்

'ப்ராசீனா சீர்ண புண்யோ' என்று வாயுஸ்துதியில் த்ரிவிக்ரமர் கூறியதன் பொருளை ஸ்ரீவிஜயதாசர் ஒரு உதாரணத்துடன் நமக்கு தெரிவிக்கிறார். நம் முன்னோர்களின் அருள், அதற்கும் மேல் ஹரிவாயுகுருகளின் அருள் நம்மைக் காக்கும். இது உண்மை. இந்த சிந்தனை எப்போதும் நமக்குத் தேவை. இங்கு அறியவேண்டிய இன்னொரு விஷயம் என்னவென்றால், நம் வம்சத்தவர் (அடுத்து வருபவர்கள்) சுகத்துடன் மகிழ்ச்சியுடன் இருக்கவேண்டுமெனில், நாம் தற்போது சத்காரியங்களை விதிப்படி செய்யவேண்டும். தினமும் சந்தியா, ஜெபம், வைஸ்வதேவம், பலிஹரணம், பஞ்சமஹாயக்ஞ, நித்ய நைமித்திக விரதங்களை அனுசரித்தல், இவற்றுடன் அடுத்தவர்க்கு உதவி செய்தல் என

இருக்கவேண்டும். அப்போதே தாசரின் அறிவுரையை கேட்டது போலாயிற்று.

### ஆஸ்விஜ பகுள சப்தமி
### ஸ்ரீபிராணேசதாசரின் ஆராதனை

ஸ்ரீஜகன்னாததாசருக்குப் பிறகான தாச வரிசையில் முதலாவதாக இருப்பவர் ஸ்ரீபிராணேசதாசர். இவர் தன் குருவின் அடியொற்றி, பல கீர்த்தனைகளை இயற்றி தாச சாகித்யத்தை வளர்த்து, அவருக்கு மிகவும் பிரியமான சிஷ்யராக இருந்தார்.

கணக்கர்களின் குடும்பத்தில் வந்த திருகப்ப என்பவரின் இரண்டாம் மகன் யோகேந்திரப்பா, ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் அருளுக்கு பாத்திரரானவர். ஜகன்னாததாசரின் அறிமுகத்தால் இவரின் வாழ்க்கையே மாறியது. அவரை குருவாக ஏற்றுக்கொண்டார்.

வரபோ ஸ்ரீஜகன்னாததாச குரவ: நாமாள்வெ சாஷ்டாங்கவ ।
ஹரினாமாங்கிதவித்து ரக்ஷிஸு விபோ பூனாத தாசப்ரபோ ॥

பிராணேச விட்டலா என்று அங்கிதம் பெற்று, தன் வாழ்க்கையையே ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்தார். குரு அருளிக் கொடுத்த 14 விக்ரகங்களை நித்ய பூஜைகளை செய்தவாறு, பாடல்களை இயற்றுவதன் மூலம், தத்வபிரசாரமும் செய்து, சமூக நலனுக்கான செயல்களை செய்யத் தொடங்கினார். ஸ்ரீவரதேந்திர தீர்த்தரின் கிருபைக்கு பாத்திரராகி அவரது ஆராதனையை நடத்தினார். 1822ம் ஆண்டு சித்ரபானு சம்வத்ஸரத்தில் இந்த நாளில் ஹரி நாமஸ்மரணை செய்தவாறு உத்தமலோகத்தைச் சேர்ந்தார்.

பற்பல நற்செய்திகள், புராணக் கதைகள், நாடகங்கள், கன்னட வாயுஸ்துதி என்று இவரது கிருதிகள் பலவாறு உள்ளன. சமூகத்தில் தர்ம சிந்தனையை, ஹரிதாச பரம்பரையை வளர்ப்பதில் மிகச் சிறந்த வேலையை செய்திருக்கிறார். சுமார் 250க்கும் மேற்பட்ட கிருதிகளை இயற்றியுள்ளார். ஸ்ரீராயரைப் பற்றி:

ஸ்ரீராமசந்த்ராங்க்ரி சரசீருஹ பைகனிகெ
தீர சுதீந்த்ரகர சம்பூதகெ
வாராஹிதீர மந்த்ராலய நிகேதனகெ
ஸ்ரீராகவேந்திரராயர சரணகெ
ஜயமங்களம் நித்ய சுபமங்களம் ||

இவரைப் பற்றி சொல்லும்போது: கஜ ரிஷி அம்பகனெ பஷுபதி த்ரிஜகதி பூஜிதனெ ஹர ஹர |
அஜினாம்பரதரனே கருணிஸோ விஜயேக்ஷண ஷிவனெ ஹர ஹர |

வாயுதேவரைக் குறித்து:
குருவெ பாரதி நாத ஷரணு லாலிஸோ மாத
ஹரி பதார்ச்சனெ கொட்டு பொரெயோ தயெயிட்டு ||

மேலும்:
ப்ராண அபான வியான உதான சமான
ஞானமயா சத்வஷரீர சமீர
ஆனந்த்ரசாந்த்ர ஹரினந்தன பவமான || -- ஸ்ரீபிராணேசதாசர்

**ஆஸ்விஜ பகுள அஷ்டமி**
**முக்கியமான விஷயங்கள்**

சகல சந்தக்ஷகரு மாதெய தருவாய
சகல போதகரெல்ல தந்தெய தருவாய
சகல சுககளெல்ல பக்திய தருவாய
சகல போகங்களு சௌக்யத தருவாய
சகல விரதங்களு ஹரிதினத தருவாய
சகல க்ஷேத்ரங்களு உடுபின தருவாய
சகல விக்ரஹகளு கிருஷ்ணன தருவாய
சகல சாஸ்திரங்களு சுதாத தருவாய
சகல வர்சஸவெல்லா வைஷ்ணவ தருவாய
சகலேஷ உடுபின ஸ்ரீகிருஷ்ண விஜயவிட்டல
அகில வைபவதிம் மெரெத தருவாய || -- ஸ்ரீவிஜயதாசர்

உலகில் உள்ள பல விஷயங்களில் அவற்றில் முக்கியமானவை எது என்ற பட்டியலை நம்முன் வைக்கிறார் ஸ்ரீவிஜயதாசர். இதை அனைவரும் அறிந்து, மரியாதை அளித்து, பூஜிக்கவேண்டும். இவை மிகவும் முக்கியமானவை என்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. இதே போல ஸ்ரீவாதிராஜரும், மிகவும் முக்கியமானவை என்றும் பூஜிக்கத் தகுந்தவை என்றும் சிலவற்றின் பட்டியலைக் கொடுக்கிறார்.

குருபகுதி பேகு ஹிரியர கருணெ பேகு
ஹரிகதெகள நித்யகேளுதிரபேகு
விரகுதி பேகு விஷ்ணுவினாராதனெ பேகு
வரமந்த்ர ஜப பேகு தபபேகு பரகதிகெ
சிரிஹயவதனன பரமானுக்ரஹ பேகு விஷய நிக்ரஹ பேகு ॥ -- ஸ்ரீவாதிராஜர்

ஸ்ரீஜகன்னாததாசர் இன்னொரு விதத்தில் முக்கிய விஷயங்களைப் பற்றி கூறுவதாவது:

ஈசனல்லி விக்ஞான பகவத்தாஸரல்லி சத்பக்தி விஷய நி
ராஸெ மித்யாவாதியலி ப்ரத்வேஷ நித்யதலி ।
ஈ சமஸ்த ப்ராணிகளொளு ரமேஷனிஹனெந்தரிது அவரபி
லாஷெகள பூரெயிசுவரெ மஹயக்ஞ ஹரிபூஜே ॥

**ஆஸ்விஜ பகுள நவமி**

**வியாப்த-உபாஸனை**

இங்கு வியாஸராஜர் ஒரு மிகவும் அற்புதமான கற்பனையை எடுத்து வைக்கிறார். இதுவே 'வியாப்தோபாஸனை' என்றார். இந்த சிந்தனை நம் மனதில் நிறைந்திருக்கவேண்டும். நம் இதய-கமலத்தில் இருந்து, அனைத்து இடங்களிலும் நிறைந்திருக்கும் ஸ்ரீஹரியின் சிந்தனையே நமக்கு தேவை. பிம்பரூபி பகவந்தனின் உண்மையான பூஜை இதுவே.

என்ன பிம்ப மூருதிய பூஜிபெ நானு
மனமுட்டி அனுதின மரெயதெ மரெயதெ ॥ப॥

காத்ரவெ மந்திர ஹ்ருதயவெ மண்டப
நேத்ரவே மஹதீப ஹஸ்த சாமரவு |
யாத்ரெ ப்ரதிக்ஷிணெ ஷயன நமஸ்கார
ஷாஸ்ர மாதுகளெல்ல மந்த்ரகளு ||1||

நுடிவ ஷப்தகளெல்ல ஹுுவுகளாயிது
நடெவுதெல்லவு பஹு நாட்யங்களு |
உடுவ ஹோதிகெயெல்ல உசிதவாத வஸ்த்ர
கொடுவ பூஷணவெல்ல திவ்யாபரண ||2||

தரிஸித கந்தவெ சரணக்கெ கந்தவு
சிரதல்லி முடியுவ புஷ்பவெ மாலெ |
ஸ்திரவாகி கூடித புத்தியெ ஆரதி
அரிதோடலிகெ உம்பன்னவெ நைதேத்ய ||3||

என்ன ஸ்வரூபவெம்புதெ ரன்னகன்னடி
என்ன மனோவ்ருத்தி எம்புதெ சத்ர |
இன்னு நுடிவ ஹரி நாமாம்ருதவெ தீர்த்த
என்ன மனவெம்புதெ திவ்ய சிம்ஹாஸன ||4||

அன்ய தேவதெ யாகெ அன்ன ப்ரதிமெயு யாகெ
அன்யவாத மந்த்ர தந்த்ரவ்யாகெ |
என்னல்லி சரித சாதன்னங்களிருதிரெ
சென்னாகி ஸ்ரீகிருஷ்ண ஸ்வாமிய பூஜிபெ ||5|| -- ஸ்ரீவியாஸராஜர்

## ஆஸ்விஜ பகுள தசமி
## பரிபூர்ணனான ஸ்ரீஹரி

அனைத்து நற்குணங்களால் நிரம்பிய ஸ்ரீஹரி ஒருவனே, பரிபூர்ணனானவன் என்று ஸ்ரீமதாசார்யர் தமது சர்வமூல கிரந்தங்களில் பல ஆதாரங்களைக் கொண்டு நிரூபித்தார். அதன் சாரமாக புரந்தரதாசர், விஷ்ணுவின் பரிபூர்ணத்வத்தை விவரிக்கிறார். ஞானானந்தமயனான ஸ்ரீஹரி ஸ்வகதபேத-விவர்ஜிதன். 'ஏகவமேவ அத்விதீயம் ப்ரம்ம' என்றார்.

பரிபூர்ண ஞானபூர்ணானந்த பரிபூர்ண |
புரந்தரவிட்டல விபுவே பாதனக பரிபூர்ண || -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீஹரியின் பரிபூர்ணத்வத்தைப் பற்றிய ஸ்ரீமதாசார்யரின் வாக்குகள்:
நாராயணாய பரிபூர்ண குணார்ணவாய...
பூர்ணகுணைகரதிக ஞானேச்சாசக்திபி: ஸ்வதிகபூர்ண:...
ஆசேஷ தோபோஜ்யேத பூர்ணசத்குணம்..
சமஸ்தகுண சம்பூர்ணம் சர்வதோஷ விவர்ஜிதம்...
பூர்ணானந்த ஞானசக்தி ஸ்வரூபம்...
நிகிலபூர்ணகுணைகதேஹம்...

பாதநக பரிபூர்ண, ஞானுஜங்க பரிபூர்ண
உருகட பரிபூர்ண, நாபிகுக்ஷி பரிபூர்ண
உரகண்ட பரிபூர்ண, அம்புஜ முக பரிபூர்ண
சிரோ பாஹு பரிபூர்ண, ஷிரோருஹ பரிபூர்ண
சர்வாங்க பரிபூர்ண, நம்ம புரந்தரவிட்டலா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரோத்ர நேத்ர பரிபூர்ண, ப்ராணேந்த்ரிய பரிபூர்ண
ஞானேந்த்ரிய கர்மேந்த்ரிய பரிபூர்ண, புரந்தரவிட்டலனு
சர்வாவயவ பரிபூர்ணனாகி வியாபிஸிஹனு || -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீஹரியை வணங்கும்போது ‘அணுரேணு த்ருணகாஷ்ட பரிபூர்ண கோவிந்தா’ என்று ஸ்ரீஹரி, அனந்த குணங்களால் பரிபூர்ணன் என்று தெரிவிப்பதற்காக. இதையே ஸ்ரீபுரந்தரதாசர் -

ஆவாவ காலதல்லி ஆவாவ தேஷதல்லி
ஸ்ரீவல்லப பரிபூர்ண பூவல்லப பரிபூர்ண
சகல லோகதளொப்பனெ ஸ்ரீபுரந்தரவிட்டலனு பூர்ணனு ||

இப்படியே மகாவிஷ்ணு ஆனந்தமயன், ஞானமயன். விக்ஞான மயன். மனோமயன் ஆகியிருக்கிறான். ‘அப்ராக்ருத’ விக்ரஹனன்னு புரந்தரவிட்டலா ஆனந்த ஆதுல’ என்றார்.

**ஆஸ்விஜ பகுள ஏகாதசி**

## இதற்கு ஆசைப்படுங்கள்

பொதுவாக மனிதன், தான் விரும்பும், தனக்குத் தேவையான விஷயங்களைப் பற்றிய ஒரு பட்டியலையே வைத்திருப்பான்.

ஆனால் இந்த விஷயங்கள் தனக்கு இஹ-பரங்களில் சுகத்தைக் கொடுக்கக்கூடியவையா என்று சிந்திக்க மாட்டான். இதை அறிந்த ஸ்ரீவிஜயதாசர், சொல்வதாவது:

காலகாலக்கெ நின்ன நாமத ஸ்மரணெயனு
நாலிகெகெ கொடு கண்ட்ய நாராயண
கேளு மதியனெ பிடிஸொ கீர்த்தனெய மாடிஸோ நி
ந்னாளுகளொளகெ ஊளிகவனித்து
பாலிஸோ பளலிதெனோ பவதொளகெ பித்து ப
யலாஸெயலி நா காலவ களதெ
பாலஸாகரஷாயி விஜயவிட்டல நின்ன
பாலிகெ பந்தெனோ பரமபுருஷ ஹரே ||

நாடிஸு நின்ன சரணதலி என்ன மனஸு ||

நின்ன தாஸர த்வாரவன்னு காய்தர மனெ |
குன்னி எந்தெனிசய்ய கோபாலவிட்டலா || -- ஸ்ரீகோபாலதாசர்

நின்ன த்யானவ கொடு என்ன தன்யவ மாடு |
பன்னங்கசயன ஸ்ரீபுரந்தரவிட்டலா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

வாழ்க்கையில் நம் விருப்பங்கள், நமக்கு மற்றும் நம் சார்ந்தவர்களுக்கு பெருமை தரக்கூடியதாக இருக்கவேண்டும். அதற்கு நாமே ஒரு உதாரணமாக வேண்டும். அதற்கு ஸ்ரீஹரியிடம் நமக்கு வேண்டியவற்றைக் கேட்கிறார் ஸ்ரீவாதிராஜர்.

குருபகுதி இரபேகு ஹிரியர கருணவு பேகு
ஹரிகதெகள நித்யதலி கேளுதிரபேகு
விரகுதி பேகு விஷ்ணுவினாராதனெ பேகு
வரமந்த்ர ஜப பேகு தப பேகு பரகதிகெ
பரிபரிய விரத பேகு சிரிபித ஹயவதனன
பரமானுக்ரஹ பேகு விஷய நிக்ரஹ பேகு || -- ஸ்ரீவாதிராஜர்

எந்தெந்தென்ன மனதிந்த ஆகலதிரோ
நந்தனந்தனனெ ஆனந்தமூர்தியே || -- ஸ்ரீவியாஸராஜர்

## ஆஸ்விஜ பகுள த்வாதசி
## கடன்களிலிருந்து விடுபடு

மனிதன் பிறந்துவருவது தனது வினைப்பயன்களால். ‘ருண’ என்றால் நாம் பெற்ற கடன் என்று பொருள். மற்றவர்களிடமிருந்து பெற்ற கடனை, தயவு தாட்சிண்யங்களை நாம் தீர்க்கவே வேண்டும். இதற்காக சாஸ்திரங்களில் சில விதிகளை சொல்லியிருக்கின்றனர். ஹரிதாசர்கள் இதைப் பற்றி சொல்வதாவது: கடனாளியை ‘ஹொலெய’ (கெட்டவன்) என்கின்றனர்.

ருணத சோதகவு ஜன்மஜன்மாந்தரக்கெ
தொலகது ஆவாத பரிய துடிமெ
அனிமிஷரு பேளுவரு ஸ்ருதியிந்தலி
ருண பயங்கரரூபி விஜயவிட்டலரேய
ருணவித்தவனு ஹொலெயனெந்தெனிஸுவனு || -- ஸ்ரீவிஜயதாசர்

இத்தகைய கடன்களைப் பற்றி தெரிவித்த ஸ்ரீவிஜயதாசர், இவற்றிலிருந்து வெளிவருவதற்கான வழியையும் சொல்கிறார். தகுதி உள்ளவர்கள் தினமும் பிரம்மயக்ஞாதிகள், ஹோம, ஹவன, பித்ருகார்ய ஆகியவற்றைச் செய்து, சிறிதாவது இந்த கடன்களிலிருந்து வெளிவர வேண்டும் என்கிறார்.

ரிஷிகள ருண பூர்வாசிரமதிந்த பரிஹார த்ரி
தஷர ருண மேதாதிகளு மாடே
ஆசுசம்பந்திகள ருண க்ருஹஸ்தாஷ்ரமதல்லி
புஸியல்லி தித்தி போகுவுது சித்தி
வசுதெயொளகெ ஒந்து காசுகொட்டவன ருண
வசுதெயெல்லா திருகெ போகவைய்யா
பஷுபால அவ்யயாத்ம விஜயவிட்டலரங்க
பசுரொளு போகலிட்டு பேஸஸதே பிடதய்யா || -- ஸ்ரீவிஜயதாசர்

தேவருண, ரிஷிருண, ஆசார்யருண, பித்ருருண இல்லாமல், இன்னும் பலரின் பல விஷயங்களுக்காக ருணங்களை பெற்றிருப்போம். தாய், குரு, உற்றார், உறவினர், நண்பர், சமூகம், நாடு

என உதாரணங்கள். எளிமையான வாழ்வு வாழவேண்டும். மேற்கண்ட செயல்களைச் செய்து இத்தகைய ருணங்களிலிருந்து நாம் வெளிவர வேண்டும். சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட, நம் தகுதிக்கேற்ப தர்மானுஷ்டானங்களை குரு மற்றும் பெரியவர்களிடமிருந்து அறிந்து, பின்பற்ற வேண்டும்.

ருணவெம்ப பாதகவு பஹு பாதெபடிசுதிதெ |
குணநிதியே நீனென்ன ருணவ பரிஹரிஸோ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

**ஆஸ்விஜ பகுள த்ரயோதசி**
**கர்மங்களை விடாதீர்கள்**

பரசதியு பரதனவு பரனிந்தெ பரஹிம்ஸே
பரம பாதகத காரணவ தொரெது |
தரெகதிக புரந்தரவிட்டலன நெரெபஜிஸி
வரவனு படெயெ சாலோக்யவன்னீவ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

தான் தினமும் செய்யும் செயல்களின் நல்ல / கெட்ட பலன்களை அறியாமல் செய்துவிட்டு பின் கஷ்டப்படுகிறான். இப்படியாக கெட்ட செயல்களையே செய்து கொண்டிருந்தால், வழி என்ன? இங்கு தாசர், பெரும் பாவங்கள் என்னும் பட்டியலை நம்முன் வைத்து, இவற்றை எப்போதும் விலக்குங்கள் என்று ஆணையிடுகிறார்.

இங்கு தாசர் சொல்லும் நான்கு விஷயங்கள் மிகவும் அற்புதமானவை. இந்த நான்கின் சகவாசம் இல்லாமல் மனிதன் இல்லை என்கிறார். புரந்தரதாசர் மேலும்:

ஹெண்ணினாஸெ பிடிரெம்ப காகத பந்திதே |
ஹொண்ணினாஸெ பிடிரெந்து காகத பந்திதே |
மண்ணினாஸெ பிடிரெந்து காகத பந்திதே ||

மேலும், அடுத்தவரை திட்டுதல், துன்புறுத்துதல், திருடுதல் என இவற்றையும் விலக்கவேண்டும். இதற்கு பண்டிதர்களும் விதிவிலக்கல்ல. இவை கெட்ட பழக்கங்கள். இதிலிருந்து வெளிவந்தால், சத்கதி என்று அறிய வேண்டும். ‘கர்மானு கோ

கச்சதி ஜீவ ஏக:' என்பதுபோல ஒருவனின் கதி, அவன் செய்யும் செயல்களுக்கேற்பவே.

கோபாலதாசர் சொல்வது இது:
பரஹிம்ஸெ பரனிந்தெ பரவார்த்தெ பரஸ்தோத்திர
பரதனவு பரஸதியு ஜரிது தரிது
ஹரிஷரணரலி த்ரோஹயரகிஸதெ மனதொளகெ
பர உபகாரதர்ம ப்ரதிக்ஷணவு மாடுவந்த || -- ஸ்ரீகோபாலதாசர்

**ஆஸ்விஜ பகுள சதுர்தசி**

**மனிதனுக்கு எப்போதும் கவலை**

கவலை இல்லாத மனிதர் யாரும் இல்லை. இதற்கு புரந்தரதாசர்: 'அணுகாலவு சிந்தே ஜீவகெ' என்றார். எது வரை இப்படி என்றால் அதற்கு தாசரின் பதில் 'தன்ன மனவு ஸ்ரீரங்கனோள் மெச்சுவதனக'.

கவலை என்பது மனதின் விளைவு. அந்தக் கவலை மனிதனை மூழ்கடித்து இறுதியில் பைத்தியம் பிடிக்க வைத்துவிடும். விஷயம் எதுவாகவும் இருக்கலாம். ஒரு பொருளின் கிடைத்தல் / தொலைத்தல் என இரு விளைவும் கவலையை உண்டாக்கலாம். கவலைப்படுவது என்பது நம் கையில் உள்ளது. இதையே தாசர்:

சதியு இத்தரு சிந்தே சதியு இல்லதெ சிந்தெ
மதி ஹீன சதியாதரு சிந்தெயு |
புத்ரரித்தரு சிந்தெ புத்ரரில்லத சிந்தெ
அத்து என்னக காடுவ சிந்தெயு |
படவனாதரு சிந்தெ பல்லிதனாதரு சிந்தெ
ஹிடி ஹொன்னு கையொள்ளித்தரு சிந்தெ |

இந்த அனைத்து கவலைகளிலிருந்தும் வெளிவர தாசர் ஒரு வழியை சொல்கிறார்.

பொடவியொளகெ சிரி புரந்தரவிட்டலன
பிடதெ சிந்திசிதரெ சிந்தெ நிஸ்சிந்தே || -- ஸ்ரீபுரந்தரதாசர்

இடைவிடாமல் ஸ்ரீஹரியை, அவனின் குணங்களை நினைத்தால் வாழ்க்கை சுகம்பெறும். அவனே நம் ரக்ஷகன் என்னும் நம்பிக்கை நம்மில் வரவேண்டும்.

நானேகெ படவனு நானேகெ பரதேசி
ஸ்ரீநிதே ஹரிஎனகெ நீனிருவதனகா ||

தல்லணஸதிரு கண்ட்யா தாளு மனவே |
எல்லரனு சலஹுவனோ இதக்கெ சம்சயவில்லா || -- கனகதாசர்

என்ற நம்பிக்கை வருமாயின், இந்த கவலையைவிட்டு சுகமாக இருக்கலாம்.

**ஆஸ்விஜ அமாவாசை**

## ஜகத் சத்யம்

ஆகமங்கள் என்று சொல்லப்படும் வேதங்கள், புராண, இதிகாசங்கள், ஸ்ம்ருதிகள், பஞ்சராத்திர - ஆகியவற்றில் சொல்லப்பட்ட தத்வங்களை மறுபடி நிரூபிக்கவேண்டிய அவதாரம் எடுத்தவர் ஆசார்ய ஸ்ரீமத்வர். அவர் நிரூபித்ததில் முக்கியமான ஒன்று - ஜகத் சத்யத்வம். ஸ்ரீமதாசார்யர் நிரூபித்ததை பேசுமொழியில் கொடுத்தவர்கள் நம் ஹரிதாசர்கள்.

விஷ்வம் சத்யம் வசே விஷ்ணோர்னித்யமேவ ப்ரவாஹத:

மகாவிஷ்ணுவின் வசத்தில் இருக்கும் உலகம் (பிரம்மாண்டம்) சத்யம். உண்மை. இதையே ஹரிதாசர்கள் மொழிபெயர்த்து எளிமையாக சொன்னது:

ஸ்ரீபுரந்தரதாசர்:
சத்ய ஜகதிது பஞ்சபேதவு நித்ய ஸ்ரீகோவிந்தன |
க்ருத்யவரிது தாரதம்யதி கிருஷ்ண நதிகெந்து சாரிரை ||

கோபாலதாசர்:
ஜகக்கெ ஒடயனாகி ஜகவ பாலிசுவனு
ஜககெ கர்தனாகி ஸ்ருஷ்டிய மாள்பனு
ஜகக்கெ பின்னனாகி லயவ மாடுவனு

ஜகஜன்மாதிகர்த நம்ம ரங்க ||

ஜீவேஷ்வர ஐக்யவ ஜகது மித்யெயெந்து ஈ விதபேளுவ
மாயிகளளியந்து முக்யபிராண கரவ முகித ||

கண்ணில் தெரியும் இந்த உலகம் சத்யம். இது அனைவரின் அனுபவமே. உலகில் இருக்கும் அனைத்து பொருட்களிலும் வேறுபாடு உண்டு. இதுவும் நிரூபிக்கப்பட்டதே. இதைப்பற்றி ஸ்ரீவாதிராஜர் கூறியது:

சத்யவாத பொம்ம மித்யவல்லவொ நின்ன
மித்ய ஷஷ்ஷ்ருங்க சத்யவல்ல சுவ்வி |
மித்ய ஷஷ்ஷ்ருங்க சத்யவல்ல ஷ்ருங்கெரடு ஐ
கத்தினொளு கூடவு குயுக்திய நினகாவ கலிஸித சுவ்வி ||

இந்த உலகின் படைத்தல், அழித்தல்களை செய்யும் ஸ்ரீஹரியை வர்ணித்து ஸ்ரீபுரந்தரதாசர் பாடியது:

பிரத்யும்னனெனிஸி லோகவனாதியலி ஸ்ருஜிசுவெ தேவ
அனிருத்தனெனிஸி லோகவனனவதர பாலிஸுவெ தேவ
சங்கர்ஷணனெனிஸி லோகவ நின்னொளகிடுவெ
வாசுதேவனெனிஸி கைவல்யவனீவெ
சர்வவியாபாரக காரண நீனெயலா புரந்தரவிட்டலா விபுவெதேவ ||

உலகம், பிரம்மன், ஜீவன் என அனைத்தும் சத்யம். இதையே ஸ்ரீமதாசார்யர் 'விமதம் சத்யம் ப்ரமாண த்ருஷ்டத்வாத்' என்னும் வாக்கியத்தால் நிரூபித்தார். தனது கண்டன-த்ரய கிரந்தங்களில் இப்படியாக மித்யாத்வத்தை கண்டித்தார். ஸ்ரீஹரியால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட, சத்யமான உலகில், மூலப்ரக்ருதியின் அபிமானியான லட்சுமிதேவி, மூன்று ரூபங்களினால் இருக்கிறாள்.

நித்யமூலப்ரக்ருதி அபிமானி ஸ்ரீபூதுர்கா |
சத்யவாகிப்பளு அப்ராக்ருதகளு |
சத்யரஜசதமோ மூரு குண மிளித || -- ஸ்ரீவிஜயதாசர்

உலகின் படைத்தலைப் பற்றி கோபாலதாசர் சொல்லும்போது:

மஹத்தத்வ தெசெயிந்த பொம்மன ஸ்ருஷ்டிஸிதெ

அஹங்கார வைகாண்டதிந்த மனஸ்ஸு ஆ
மஹ இந்திரிய அபிமானி தேவதெகளன்னு
அஹங்கார பஞ்சகன்மாத்ரெயன்னு ஸ்ருஷ்டிஸிதெ
அஹங்கார தேஜஸதிந்த சக்ஷுராதி
இஹ இந்திரியகளன்னெல்ல ஸ்ருஷ்டிஸிதெ
அஹங்கார தாமஸதிந்த பஞ்சமஹா பூதகள ஸ்ருஷ்டிசிதே ||

சத்யமான உலகை படைத்தல் முதலான எட்டு செயல்களை ஸ்ரீஹரி செய்கிறான். இதையே ஸ்ரீபுரந்தரதாசர் - 'சத்யஜகஜ்ஜன்மாதி காரணன்' என்று ஸ்ரீஹரியை வணங்கியவாறு கொண்டாடுகிறார்.

சத்யஜகஜ்ஜன்மாதி காரனனே |
சத்ய பாஷணனெ சத்ய பூஷணனெ
சத்ய ஜனேட்யனே சத்யமஹிமனெ
சத்யஸ்வரூபனே சத்ய சங்கல்பனே ||

**கார்த்திக சுத்த ப்ரதமை**

## ஹனுமன மதவே ஹரிய மதவு

நீனிச்செயாதரெ ஹரியிச்சே யாதந்தெ
நின்ன பலவாகெ ஹரிய பலவாதந்தெ
நின்ன ஒலிசலு ஹரியு ஒலிதந்தெ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீபுரந்தரதாசர் 'ஹனுமன மதவே ஹரிய மதவு' என்றார். இதற்கு காரணம் - வாயுதேவர், ஸ்ரீஹரியின் பிரதிபிம்பராக இருக்கிறார். அனைத்து ஜீவர்களும், பிம்பமூர்த்தியான ஸ்ரீஹரியின் பாத-கமலங்களை வாயுதேவர் இருக்கும் அந்த இடத்தை சேர்வேண்டும். ஜீவரின் ஸ்வரூப தேகத்திலும், ஸ்ரீஹரியுடன் இருப்பவர் வாயுதேவர். ஸ்ரீஹரியின் பிரதிநிதியாக உலகின் அனைத்து செயல்களையும் நடத்துபவர். அனைத்து ஜீவரில், அவரின் உயிராக இருந்து, அவர்களின் நடமாட்டத்திற்குக் காரணமானவர் வாயுதேவர். ஸ்ரீஹரியின் ஆணைப்படி எல்லா காலங்களிலும் அனைத்தையும் செய்பவர் வாயுதேவர். தாசர் சொல்வது:

நரஹரி புரந்தரவிட்டலன கீர்த்தி
நரரிகெ தோரித நிஜகுரு மூர்த்தி || என்று கொண்டாடுகிறார்.

வாயுதேவரின் மூன்று அவதாரங்களான ஹனும, பீம, மத்வர், ஸ்ரீஹரியின் பல மற்றும் ஞான காரியங்களில் முக்கியமானவர்கள். ஆகவே, ஹரிதாசர்கள் வாயுதேவரின் இந்த மூன்று அவதாரங்களையும் ஒருசேர கொண்டாடுவது வழக்கமாக இருக்கிறது. நூற்றுக்கும் மேற்பட்ட பாடல்கள் உள்ளன.

பிரம்மாண்டத்தில் முக்கிய அங்கமாக இருக்கும் வாயுதேவரிடமிருந்தே அனைத்து செயல்களையும் செய்யவேண்டும் என்பது ஸ்ரீஹரியின் விருப்பம். இந்த திட பக்தரின் சேவைக்கு ஈடானது வேறொன்றும் இல்லை. இதற்கே 'புரந்தரவிட்டலனு ஹனுமனோள் வாஸா' என்றார் தாசர். மேலும்:

பாரதிரமண நினகெணெ காணே மூரு லோகதல்லித்தந்த |
சகல ப்ராணதல்லிதந்த பஞ்ச ப்ராணகளிகெ ப்ராணநாத ||

'குருபிரசாதோ பலவான்' என்பது ஸ்ரீமதாசார்யரின் வாக்கு. இப்படி வாயுதேவரின் தரிசனம் பெற்றால், ஸ்ரீஹரி தரிசனம் தருவான். காரணம், ஸ்ரீஹரியைக் காட்டுபவர் இவரே ஆவார்.

சஞ்சீவராயர ஸ்மரணே மாடித மேலே
அஞ்சீகன்யாதகய்ய சஜ்ஜனரிகே அஞ்சிகன்யாதகய்ய ||

**கார்த்திக சுத்த த்விதியை**
**என்னைப் பற்றிய கவலை எனக்கில்லை**

நிதிய மேலித்து நிதியனரியதந்தெ
தன்ன கண்டமணிய தா மரெதந்தெ
கண்ணிரெயத ஹஸுளெ தாயனரியதந்தெ
நின்ன தோரிதரெனெகெ நின்ன தாசரு சிரிகிருஷ்ணா || -- ஸ்ரீவியாஸராஜர்

ஹரிதாசர்கள், சஜ்ஜனர்களுக்கு செய்த மிகப்பெரிய உதவி இதுவே. ராஜர் மேலும் 'அந்தரங்கதலி ஹரிய காணதவ ஹுட்டு

குருடனோ' என்றது நினைவிருக்கட்டும். இதுவே உண்மை. நாம் அனைவரும் கண்ணிருந்தும் குருடரே. எதைப் பார்க்கவேண்டுமோ அதைவிட்டு வேறு இடத்தில் பார்க்கின்றோம். ஆத்யாத்ம சாதனைக்குத் தேவையானது நம்முன் இருந்தாலும், அதை நாம் பார்ப்பதில்லை. இதற்கே ராஜர் கொடுத்த உதாரணங்கள் மிகவும் அற்புதமானவை. இதுவே அனைவரின் அனுபவமும் ஆகும்.

ஸ்ரீஹரியிடம் வேண்டும் வழியை நாம் அறிந்திருக்கவில்லை. அதைப் பற்றி அறியவும் முயலவில்லை. காரணம் அவன் எங்கே, நாம் எங்கே. இப்படியே வாழ்க்கையை கழித்துவிடுவோம் என்று எண்ணுகிறோம். அதற்கே ஹரிதாசர்கள் - 'எல்லோ இருவ அன்னதிரு எல்லெல்லோ இருவ'. தந்தை சேர்த்த சொத்தின் மேல் அமர்ந்து, அந்த செல்வத்தையே எங்கே என்று தேடுகிறோம். அது நம்மிடமே இருக்கிறது என்கிற அறிவும் நமக்கில்லை.

கழுத்தில் மாலை போட்டுக்கொண்டே அந்த மாலையை வெளியில் தேடுகிறோம். கண்ணாடி அணிந்தவாறு, அந்த கண்ணாடியையே காணவில்லை என்று தேடுகிறோம். தாயின் மடியில் இருந்தாலும், குழந்தை அழுவதைப் போல. ஸ்ரீஹரி நம் உடலிலேயே, தத்வாபிமானி தேவதைகளுடன் இருந்து, தான் இருப்பதைக் காட்டிக்கொள்ளாமல் இருக்கிறான். கால நியாமகனான ஸ்ரீஹரி நம்முள்ளும் இருப்பது ஆச்சரியமில்லையே? இதை நமக்கு புரியவைக்கும் மனம், கண் ஆகியவற்றைக் கேளுங்கள் என்றனர் ஹரிதாசர்கள். இதற்காகவே என்றும் ஹரிதாசர்களின் நட்பு / பழக்கம் இருக்கட்டும் என்றனர் பெரியவர்கள்.

'நிதிர்நாராயண:' என்றது உண்மை. அந்த நிதியை கண்டுபிடிப்பதற்கு பக்தி தேவை. இதுவே அவனது மகாத்ம்ய ஞானம் தெளிவாக இருக்கவேண்டும். ராஜர் கொடுத்த உதாரணங்களை சரியாக புரிந்துகொண்டு, அதன்படி நடந்தால், நாம் மேம்படுவது நிச்சயம். எப்போதும் நம் சிந்தனை இப்படி இருக்கவேண்டும்.

தந்தெ தாயி பந்து பளக எந்தெந்து நீனே தயா
சிந்து நின்ன தாசர தாசனெந்தெனிசய்யா || -- ஸ்ரீவியாசராஜர்

**கார்த்திக சுத்த த்ருதியை**

**இந்திரியங்களின் வேலை**

மனிதன் எதை சாதிக்கவேண்டும் என்றாலும், அவனது மனது, இந்திரியங்கள் மற்றும் இதர உறுப்புகள் அனைத்தும் ஒன்று சேரவேண்டும். இல்லையெனில் எதையும் செய்யமுடியாது. அதிலும் மனது முக்கியமானதாகும். காரணம் 'மன ஏவ மனுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ:'. ஆனால், நம் மனம், இந்திரியங்கள் என்றும் ஒன்று சேர்வதில்லை என்னும் உண்மை நிலையை ஸ்ரீகோபாலதாசர் கூறுகிறார்.

ஹரிமூர்த்திகளு காணிசவு என்ன கங்களிகெ
ஹரிய கீர்த்தனெயு கெளிசதென்ன கிவிகெ
ஹரிமந்த்ர ஸ்தோத்திர பாரது என்ன நாலிகெகெ
ஹரி ப்ரசாதவு ஜிஹ்வெகெ சவியாகதய்ய ||

ஹரிதாச சேவெகென்ன ஹஸ்தகளு சலிசவு
குருஹிரியரங்க்ரி ஷிரபாரது
ஹரிய நிர்மால்யவாக்ராணிசது நாசிகவு
ஹரியாத்ரெகளிகின்னா காலேளதய்யா || -- ஸ்ரீகோபாலதாசர்

பவரோகத்தை தீர்ப்பவனான தன்வந்திரியிடம், நம் அனைவரின் சார்பாக தாசர் கூறுவது 'சாவதானதி கைய பிடிது நீ நோடய்யா' என்று வேண்டினார்.

இந்திரியங்களைப் பற்றி ஸ்ரீபாதராஜர் சொல்வது:

கரணகளு பிடதெ தம்ம தம்ம
விஷயங்களிகெ எளிவுதலிவே ||

இப்படி தற்காலிக விஷயங்களுக்கு நம்மை இந்திரியங்கள் அழைத்துப் போய், இறுதியில் பள்ளத்தில் தள்ளிவிடுகின்றன.

இந்திரியகளெம்ப கள்ளரைவரு
பந்திஸி தம்ம விஷயக்கொய்யென்ன
கந்திஸி ஞானவெம்ப த்ருஷ்டிய

எந்தெந்தின தர்ம தனவனொய்தரு
இந்திரேஷ லோகபதி சிரிகிருஷ்ண காயென்ன தந்தெ || -- ஸ்ரீவியாசராஜர்

## கார்த்திக சுத்த சதுர்த்தி
## உண்மையான வைஷ்ணவன்

அனந்தகோடி பிறவிகளில் கிடைக்காத இந்த மனிதப்பிறவி; அதிலும் வைஷ்ணவ பிறவி கிடைப்பது எவ்வளவு பாக்கியம்? இப்படியிருக்கும்போது, சத்-வைஷ்ணவர்களின் லட்சணங்களை அறிந்து அதன்படி நடந்தால் மட்டுமே நாம் மேம்படுவோம். இங்கு ஸ்ரீபாதராஜர், உத்தம புருஷர்களில் இருக்கவேண்டிய குணங்களை பட்டியலிடுகிறார்.

சும்மனே வைஷ்ணவனெம்பிரி பரி
பொம்ம சுக்ஞானவனரியத மனுஜன ||ப||

முகவ தொளிது நாமவனிட்டனல்லதெ
சுகதீர்த்த சாஸ்திரவனோதிதெனெ
சுகக்கெ ஸ்ருங்காரக்கெ மாலெ ஹாகிதெனல்லவெ
பகுதி ரசதல்லி முளுகிதெனேனய்யா ||1||

உரு மாதுகளாடி தணிதெனல்லதெ
நாராயண கிருஷ்ண ஷரணெந்தனெ
நாரிய நுடி கேளி மருளாதெனல்லதெ
குருஹிரியர மாத மன்னிஸிதெனேனய்யா ||2||

நரோத்தமரிகதிக கந்தர்வரிகதிக
சுரேந்த்ரகதிக ஹரகதிக
விரிஞ்சிகதிக ஸிரிகதிக
ஹரி சர்வோத்தமனெந்து திளிதேனேனய்யா ||3||

ஜகத்து சத்யவெந்து பஞ்சபேதவ திளிது
மிகெ ராகத்வேஷங்களனு வர்ஜிஸி
பகவந்தன லீலே ஸ்ரவண கதெகளிந்த
நினமகோசரனெந்து திளிதெனேனய்யா ||4||

கங்கே மை மண்ண தொளெதெனல்லதெ பவ
ஹிங்குவ ஸ்னானவ மாடிதேனே
ரங்கவிட்டலன நிஜவாத தாசர
சங்க சுகவெந்து திளிதெனேனய்யா ||5||

ஸ்ரீமதாசார்யரின் மதத்தில் வந்திருக்கும் நான், அவர் சொன்னவற்றையெல்லாம் பின்பற்றுகிறேனா என்று கேட்கிறார். வெளிப் பகட்டுகளை விட்டு, அகத்தூய்மை பெற்று, சித்தாந்தங்களின் பொருளை உணர்ந்து, சஜ்ஜனர்களின் சங்கத்தில் இருந்து, மேம்படவேண்டும் என்று, ஆறுதல் வசனங்களைக் கூறுகிறார்.

**கார்த்திக சுத்த பஞ்சமி**

## ஹரிநாமம் மட்டும் போதாதா?

ஹரிதாச சாகித்யத்தின் நோக்கம் - நிரந்தர ஹரி நாமஸ்மரணையை பரப்புவதே ஆகும். காரணம், ஹரி நாமஸ்மரணையில் அனைத்தும் அடங்கியிருக்கின்றன. அதற்கே ஸ்ரீபுரந்தரதாசர்:

ஹரிஸ்மரணெயில்லதெ பாளி பதுகிதரேனு |
நரஜன்மதல்லி ஜனிஸி பலவேனு ஹரியே || என்றார்.

ஸ்ரீவாதிராஜர் ‘ஹரிபதவ நெனவங்கே நரகத பயவில்லா’ என்றார். ஸ்ரீமதாசார்யர் ‘சங்கீர்த்ய நாராயண ஷப்தமாத்ரம் விமுக்த து:கா: சுகினோ பவந்து’ என்றதன் பொருளே தாசர் கூறியது.

ஸ்ரீஹரியின் நாமசங்கீர்த்தனையினால், ஜீவர் அனைத்து துக்கங்களினால் விடுபட்டு நிரந்தர சுகத்தைப் பெறுகின்றனர். ஸ்ரீவிஜயதாசர் இந்த பின்னணியில், ஸ்ரீஹரி நாமம் எதையெல்லாம் கொடுக்க வல்லது என்பதை விவரிக்கிறார்.

ஹரிநாம லட்சுமீ காணோ தாரித்ர்ய ஜனரிகெ
ஹரிநாம பாவன காணோ துரிதகனாவளிகெ
ஹரிநாம சஞ்சீவனவோ ம்ருதபாய ஜீவிகளிகெ
ஹரிநாம வைத்ய காணோ பவரோக களெவுதக்கெ

ஹரிநாம கங்கே காணோ மன மலின தொளிவுதக்கெ
ஹரிநாம சிம்ஹ காணோ க்ரோதவெம்ப கஜக்கெ
ஹரிநாம கரியு காணோ ஆசெயெம்ப கதளிகெ
ஹரிநாம ஷஸ்த்ர காணோ காம பல கண்டிபுதக்கெ
ஹரிநாம எத்த காணோ சத்கர்ம சாதனக்கெ
ஹரிநாம பரண காணோ சரீராலங்காரக்கே
ஹரிநாம நம்பிதரெ சர்வவு த்ருஷ்டிகோசர
ஹரிநாம ஆவாவ அபேக்ஷ்ய கொடுவுது
ஹரி மூருத்தி ரங்க விஜயவிட்டலரேய
ஹரியிந்த மனுஜகெ ஹருஷ ப்ரவாஹதென்னி || -- ஸ்ரீவிஜயதாசர்

ஹரிநாமவித்தல்லி ஹருஷவெயெந்திகு |
சுராதிகளு பல்லரு பஹுகாலதி || - ஸ்ரீவிஜயதாசர்

நாமசங்கீர்த்தனம் யஸ்ய சர்வபாப ப்ரனாஷனம் || -- பாகவதம்

**கார்த்திக சுத்த சஷ்டி**

## கணவனே கண்கண்ட தெய்வம்

சனாதன தர்மத்தில் கணவன் மனைவியர் ஒற்றுமையாக வாழ்க்கையை நடத்தி, தம் குடும்பத்திற்கும் சமூகத்திற்கும் எப்படி ஒரு உதாரண தம்பதியராக இருக்கவேண்டும் என்பது விளக்கப் பட்டிருக்கிறது.

இப்படி நடந்தால், ஸ்ரீஹரியின் அருளும் கிடைக்கிறது. கணவன் மனைவியரின் அன்பான நடவடிக்கைகளிலேயே, குடும்பத்தின் பெருமை இருக்கிறது. ஸ்ரீபுரந்தரதாசர், பெண்களுக்காக பல பாடல்களைப் பாடி பதிபக்தியின் சிறப்பினை விளக்கி, எப்படி வாழ்க்கையில் இருவரும் அனுசரணையுடன் நடக்கவேண்டும் என்பதைப் பற்றி பாடியிருக்கிறார்.

ராகம்: முகாரி. தாளம்: அட்ட
பதியெ பரதேவதெ | எனுதெ எந்து சதியரிகெ எந்து ||ப||

பதிய பளியல்லி சகல தீர்த்தகளுண்டு
பதிய பளியல்லி சகல க்ஷேத்ரகளு

மிதியில்லதானந்ததி இருவுது இல்லி
கதிகொடுவ த்ருவத பேரே சிந்திபுதேகே ||1||

பதிய சேவெயெ சகல வ்ரதங்களு
பதிய பஜிசுவுதெ சகல யக்ஞகளு
பதிய ஹ்ருதயதல்லி ரதிபதி பிதனெந்து
பதியிந்த பஜிசலு கதிகொடுவனு தேவ ||2||

பதிய நிந்திசுவளு பாதகியாகுவளு
பதிய வசனகளிகெ பதலு பேளுவளா |
கதிய தப்பிசுவனு புரந்தரவிட்டலா
மதியுள்ளவரு இதனரிது நடெயபேகு ||3||

பதிவிரதைப் பெண்களின் பல கதைகளை புராண இதிகாசங்களில் காணமுடியும். அனைவரும் பதி- அந்தர்கத பகவந்தனை பூஜித்து, அர்ச்சித்து மேம்பட்டிருப்பதை பார்க்கிறோம். அத்தகைய சிந்தனையே மிகவும் முக்கியம் என்று அறியவேண்டும். 'பதிரேவ கதிஸ்த்ரீணாம்...' என்ற வாக்கு உண்மையானது. ஸ்ரீஜகன்னாததாசரின் 17பத்திகளைக் கொண்ட பாடலான 'சாரித டங்குரயமனு' என்னும் பாடலில்:

ஹொத்தாரெ எத்து பதிகெ எரகவவள
களுவீலி காந்தன தனவனொஞ்சிசுவள
கண்ட நர்தனிகனெந்தபமான மாள்பள
பதிகெ பேகாதவரொளு மத்ஸரிசோள ||

மேலும் பல விதங்களில் அறிவுறுத்துகின்றனர் தாசர்:

பாபினாரேரனெளெதந்து நரகதொளிடிதெந்து...
சாரித டங்குர யமனு..

**கார்த்திக சுத்த சப்தமி**

**சாதன ஷரீரவிது**

'சாதன ஷரீரவிது, நீ தயதி கொட்டத்து, சாதாரணவல்ல சாதுப்ரியனே' இந்தப் பாடலை அனைவரும் கேட்டிருக்கலாம்.

ஸ்ரீபுரந்தரதாசரும் 'மானவ ஜென்ம தொட்டது' என்றார். ஜீவன் தனது சாதனையை செய்வதற்கு கிடைத்தது இந்த பிறவி. 'இதம் சரீரம் கலு தர்ம சாதனம்' என்ற வசனமே இதற்கு ஆதாரம். இந்த தேகத்தைப் பற்றி ஸ்ரீவிஜயதாசர் சொன்னது இது.

ஈ தேஹதிந்தல்லி சாதன சம்பத்து
ஈ தேஹதிந்தல்லி சாதுகள சேவே
ஈ தேஹதிந்தல்லி பேதார்த்த ஞான
ஈ தேஹதல்லி பூர்ணபோதக மதவிடிது
சாதிசுவந்தெ நீ தயவனு ஹரஹி
உதீர்ண விஜயவிட்டல பக்த க்ருபாளு -- ஸ்ரீவிஜயதாசர்

வேதத்தில்: 'ப்ராம்ஹணஸ்ய ச தேஹோயம் க்ஷுத்ரகாமாய நேஷ்யதே'. ஸ்ரீஹரியால் படைக்கப்பட்ட ஜீவர்களில், அறிவை நிரப்பிக் கொண்டு வந்தது இந்த மனிதப் பிறவி மட்டுமே. இத்தகைய பிறவியைப் பற்றி தாசர் மேலும்:

மனவே ஈ ஜனும தப்பித மேலே
யாவ சாதனவு நிஸ்சயவில்ல விஜயவிட்டல பல்ல ||

புரந்தரதாசரின் மிக உண்மையான வாக்கியம்:

மானவ ஜென்ம தொட்டது, இத
ஹானி மாடலு பேடி ஹுச்சப்ப களிரா ||

'கோடிகோடி பிறவிகளிலும் கிடைக்காத இந்த மனிதப்பிறவியை பெற்றிருக்கிறீர்கள். இதை வீணடிப்பவன் பைத்தியமே' - என்கிறார் தாசர். இத்தகைய சாதன சரீரத்தைப் பெற்றபிறகு 'தாளி பரத முன்ன தர்மவ களிஸிரோ' என்று எச்சரிக்கிறார். 'க்ஷணஷ: கணஷஸ்சைவ வித்யாதர்த்தம் ச சாதயேத்' - கல்வி மற்றும் தர்மங்களை செய்வதில் ஈடுபடவேண்டும். இந்த வாழ்க்கையில் நமக்கு இருக்கும் ஐந்து கடன்களிலிருந்து (ருணங்கள்) விடுபடுவதற்கும், இந்த சரீரத்தின் உதவி தேவைப்படுகிறது. ஸ்ரீஹரியின் கருணையைப் பெறுவதற்காகவே, இந்த சரீரத்தைப் பயன்படுத்தவேண்டும்.

**கார்த்திக சுத்த அஷ்டமி**

## யசோதையின் பாக்கியம்

பாலலீலைகள் என்று சொன்னாலே அது பொதுவாக கிருஷ்ணனின் பாலலீலைகளைக் குறிப்பதே. கிருஷ்ணனைப் பாடிப்பாடி, புகழ்ந்து, கொஞ்சாத தாசர்களே இல்லை எனலாம். இங்கு ஸ்ரீவாதிராஜர், குழந்தையான கிருஷ்ணனை இதயத்தில் நிறுத்தி, வாய் நிறைய புகழ்ந்து பாடுவதின் அழகைப் பார்க்கலாம். யசோதையின் பாசத்தின் ஆழம், அன்பின் எல்லை, தாய்ப்பாசம் இவற்றுடன் ஸ்ரீகிருஷ்ணனைக் கொஞ்சுவதை, மிகவும் அழகாக வர்ணித்திருக்கிறார்.

ஏனு சுக்ருதவ மாடிதளோ யசோதே ||ப||
ஸ்ரீனிதியாத கிருஷ்ணன கரெதெத்தி முத்திபளந்தெ ||அப||

கங்காஜனககெ கடிகெ நீரனெரெவளந்தெ
மங்களாங்ககெ பாமெ ஸ்ருங்கரிபளந்தெ
துங்க பூதரன தொட்டிலொளு மலகிபளந்தெ
கங்களிகோசரன எத்தி முத்திபளந்தெ ||1||

சதுராஸ்யன பிதன சுதனெந்தெத்துவளந்தெ
ஸ்ருதி வினுதகெ ஜோகுளவ பாடுவளந்தெ
ஷதரவிதேஜகாரதியன எத்துவளந்தெ
கதபீதனிகெ பாமெ ரக்ஷெமிக்குவளந்தெ ||2||

ஜகவனெத்திதவன மகுவெந்தெத்துவளந்தெ
நிகமகோசரன ஈக்ஷிசுவளந்தெ
அகணித சத்குணன ஹக்காதி கட்டுவளந்தெ
மிகெ நித்ய த்ருப்தனிகெ பாலனெரெவளந்தெ ||3||

பஹுமுகனிகெ பாமெ முத்து நீடுவளந்தெ
அஹிதல்பனிகெ ஹாவ துளிதீயெம்புவளந்தெ
பஹு தைத்ய சம்ஹரனே பயவ தோருவளந்தெ
மஹிம நரசிம்ஹகெ கும்மன தோருவளந்தே ||4||

கடகோலு நீணனு கையொளகெ பிடிது பா

ல்கடலொடெய த்வாரகா நிலய
பிடதெ சலஹுவ ஹயவதன மோஹன முத்து
உடுபின கிருஷ்ணன உயேளெத்துவளந்தெ ||6||
(ஸ்ரீவாதிராஜர்)

ரிஷிமுனிகள், தேவானு தேவதைகள் ஆகியோர் கடுந்தவம் புரிந்து, பூஜித்து வணங்கினாலும் தரிசனம் கொடுக்காத, கண்ணுக்குத் தெரியாத ஸ்ரீஹரி, குழந்தையாக, தாயின் புடவையைப் பிடித்தவாறு, தன் லீலைகளால் அவளை மயக்கி, அந்த யசோதை 'ஏனு சுக்ருதவ மாடிதளோ' - அந்த கிருஷ்ணனின் அருகிலேயே இருப்பதற்கு. - என்கிறார் ராஜர்.

**கார்த்திக சுத்த நவமி**

**தாசனாவதே பாக்கியம்**

ஸ்வதந்திரம் மற்றும் பரதந்திரம் என்னும் இரு தத்வங்களை அனைத்து சாஸ்திரங்களும் விளக்குகின்றன. ஸ்வதந்திரன் என்னும் ஸ்ரீஹரியின் சேவகர்கள் / தாசர்களே - ஜீவகணர்கள். இதையே ஹனுமந்தன் 'தாஸோஹம் கௌஸலேந்த்ரஸ்ய' என்று மிகவும் பெருமையாகக் கூறினார்.

ஸ்ரீஹரியின் மகிமைகளை அறிந்தவர்கள், சொல்பவர்கள் நிஜ தாசர்கள். இந்த தாசனின் தாசர் ஆகாமல், ஸ்ரீஹரியின் மகிமைகளை அறிவது சாத்தியமல்ல. என்றபிறகு சாதனைக்கு, மேம்பாட்டிற்கு என்ன வழி? அதற்கே ஹரிதாசர்களின் தாசனாகி வாழ்க்கையை மேம்படுத்திக் கொள்ள வேண்டும். இதையே ஸ்ரீசவிட்டலர்:

ஸ்ரீவரன தாசரிகெ பகுதிலி
சேவகனு நானெந்து பேளுவ
ஜீவனத சஜ்ஜீவி ஆவ ஹரிதாசனெந்தரிது |
ஆவனாதரூ ஆதியலி இவ
பாவ சுத்ததி ஓதி பரெயலு
காவனய்யனு கருணிசுவனு சதாவகாலதலி || - ஸ்ரீசவிட்டலதாசர்

தாசானுதாசன் என்பவனே சுஜீவி. ஸ்ரீஹரியின் நற்குணங்களை, தூய்மையான மனதுடன் அறிந்தவனை ஸ்ரீஹரி கருணையுடன் காப்பாற்றுகிறான். 'தாசானுதாசோ பவிதாஸ்மி பூய:' எனவேண்டும். ஹரிகதாம்ருதசார துவக்கத்திலேயே ஜகன்னாததாசர்:

ஜகன்னாதவிட்டலன கருணபடெவ முமுக்ஷுஜீவரு
பரம பாகவதர கொண்டாடுவுது பிரதிதினவு ॥ என்றார்.

நின்ன தாசரு த்வாரவன்னு காய்வ மனெ
குன்னி எந்தெனிசென்ன கோபாலவிட்டலா ॥ என்று வேண்டினார் கோபாலதாசர்.

ஸ்ரீபுரந்தரதாசர் 'தாசனெந்தாகுவெனு தரெயொளகெ நானு' என்று பெருமையுடன் பாடினார். மேலும் 'தாசன மாடிகோ என்ன' என்று வேண்டினார். ஸ்ரீவிஜயதாசர் வேண்டுவது இப்படியாக இருக்கிறது.

தாச தாசர தாஸ்யவ கொடு । தோஷராசி களெது ।
ஸ்ரீஷதீஷ விசேஷ சுரேஷ்வர । பாசுர சரித நீ பவ்ய சரித்ரா ।
தாசர பாக்யவிது சர்வதேசதொளகெ தும்பி । சூசுதலிதகோ ॥

சஜ்ஜனர்கள் பெருமையுடன் சொல்லவேண்டியது : 'தாச தாச தாசர மனெய தாசானுதாச நானு' என்கிறார்.

**கார்த்திக சுத்த தசமி**

**ஸ்ரீவிஜயதாசரின் புண்யதினம்**

அஞ்ஞான திமிரச்சேதம் புத்தி சம்பத் ப்ரதாயகம் ।
விக்ஞான விமலம் ஷாந்திம் விஜயாக்ய குரும்பஜே ॥

ஹரிதாச சாகித்ய பரம்பரையில், ஸ்ரீபுரந்தரதாசருக்கு அடுத்த இடத்தைப் பிடித்தவர் ஸ்ரீவிஜயதாசர். இவரிடமிருந்து தொடங்கி வந்த சாகித்யங்கள் மற்றும் பரம்பரையில் வந்த சிஷ்யர்களின் வரிசை, இடைவிடாது இன்றுவரை வந்திருக்கிறது. சஜ்ஜனர்களின் மேம்பாட்டிற்காக அவதரித்து வந்த இந்த மகானை புகழ்ந்து பாடாத ஹரிதாசர் இல்லை. மோகனதாசர் சொல்வது:

இவர ஸ்மரணெயெ ஸ்னான இவர ஸ்மரணெயெ த்யான ।
இவர ஸ்மரணெயெ அம்ருதபான ॥ என்றார்.

சாகித்ய அபிமானிகள் தினந்தோறும் சொல்வது ஸ்ரீவியாச விட்டலரின் விஜயகவசம்.

ஸ்மரிஸி பதுகிரோ திவ்ய சரணக்கெரகிரோ ।
துரித தரிது பொரெவ விஜயகுருகளெம்பரா ॥

ஸ்ரீவிஜயதாசரின் முதலாம் சிஷ்யர் மற்றும் அவரின் வாழ்க்கை வரலாற்றை முதலில் எழுதியவருமான ஸ்ரீகோபாலதாசர், குருவின் கருணையை ஸ்தோத்திரங்களில் பாடியது இவ்வாறு:

ஸ்மரிசுவெ நா நிம்ம சரணகமலவன்னு । விஜயராய ।
ஷரணஜனர ப்ரிய பரம கருணானிதி விஜயராய ।
திவிஜராவேஷதிந்த அவனியொளு உதிஸிதி விஜயராய
மஹியெல்லா சரிஸி சர்வக்ஷேத்ரமூருதிய வர்ணிசிதேயோ
மத்வமதக்கெ அவிருத்தவாகி கவன பத்தாதி । விஜயராயா
ஷுத்ததத்வஸார சுளாதி பதகள புத்திலி விஜயராய ।
என்னிந்தலேனேனு ஆகோ சாதனவெல்ல நின்னதெ விஜயராய
ஹ்ருத்கமலதி ஹரிய திளிஸி சத்கதிகபயவித்தெ விஜயராய
நின்ன புண்யத சேஷ இன்னுவும்புவெ நானு பண்ணிபெனெ
சிரி மஹராஜ கோபாலவிட்டல பொலிது கரது
கைபிடிதனய்ய விஜயராய ॥

கோபாலதாசரின் ஆத்ம மேம்பாட்டிற்காக உதவிய விஜயதாசரை, எவ்வளவு பாராட்டினாலும் அது போதாது என்று சொல்லி அவர் பாடியதாவது - 'நித்ய பஜிஸி பதுகுவெ புண்யாத்மன்ன'. குருவின் பெயரின் ஒவ்வொரு எழுத்தின் மகிமைகளையும் இவ்வாறு சொல்கிறார்.

வி யெந்து ஜபிசலு விரகுதி தொரகுவுது
ஜ என்னெ ஜனனமரண நாஷவு
ய என்னெ யெல்லதக்கிந்த பகுத்யதிகித்து
ராயென்னெ ராய ராயரன தோர்புவுது ॥

ஸ்ரீவிஜயதாசரிடம் இருந்த குருபக்தி மற்றும் சிஷ்ய வாத்ஸல்யம் வேறொருவரிடம் காண்பது அரிது. கோபாலதாசர் இருந்த இடத்திற்குப் போய் அவரை மேம்படுத்தி, ஜகன்னாததாசரை அழைத்துக்கொண்டு அவரையும் மேம்படுத்திய வரலாறு பார்க்கிறோம். தம் குருவைப் பற்றி இவர் சொல்வது:

குருகளெந்தரெ இவரெ குருகளு எனகெ காணோ
தரெயொளகெ புரந்தரதாசரெ குருகளு ‖ என்கிறார்.

ஹரிதாச சாகித்யத்தை மறுபடி நிலைநாட்டியதில் முக்கிய பங்கு வகித்தவர் ஸ்ரீவிஜயதாசர். சுளாதி தாசர் என்று அழைக்கப்பட்ட இவரது சுளாதிகளில் மத்வ சித்தாந்தத்தின் பற்பல தத்வங்களை மொழிபெயர்த்து எளிமையாக்கினார். இரண்டாம் கட்டத்தில் தலைவரான தாசருக்கு நான்கு பேர் சிஷ்யர்கள் இருந்தனர். தனக்கு அனைத்தும் தன் குருவே என்றார் கோபாலதாசர் - வத்ஸ தானு கூகலு காமதேனு ஒதகிதந்தெ' என்றார். மேலும்:

தந்தெ விஜயராய வ்யாளெகெ । பந்த்யோ விஜயராய ।
ஹிந்தேனு ஜன்மவு முந்தேனு ஜன்மவு । ஒந்து திளியதெந்திகு யென்னய ‖

என்று சொல்லி, 'இன்னேனு இன்னேனு யென்ன குலகோடி பாவன்னவாயிது நிஸ்சயா ஜீயா' என்றது, அனைத்து சஜ்ஜனர்களுக்கும் சொன்னதாகும். ரகுபதிவிட்டல தாசரின் வாக்கு இவ்வாறாக இருக்கிறது:

நானெந்தோ அஹங்காரவன்னெ
தொலகிஸோ நின்னவரவனெனிஸோ ।
நீனே கதியெந்து நின்ன மொரெஹொக்கெனோ
க்ஷோணியொளகெ பளலி ‖

'நின்ன நம்பித நரகெ அன்யராஸ்ரயவேகோ, சன்ன குரு விஜய ராயா' என்று வேணுகோபால விட்டலதாசர் கூறினால், ஹயவதன தாசர் 'தாசர நோடிரோ விஜயதாசர பாடிரோ' என்று கொண்டாடினார்.

இப்படி அனைவராலும் கொண்டாடப்பட்ட ஶ்ரீவிஜயதாசரின் திவ்ய சரித்திரத்தை, அவரது கிருதிகளை படித்து தன்யராவோமாக.

**கார்த்திக சுத்த ஏகாதசி**

**ஹரிநாமமே நம்மை காப்பாற்றும்**

ஹரிதாசர்களுக்கு ஹரி நாமமே உயிர்மூச்சு. அதன் ருசியை உணர்ந்த தன்யர்கள் இவர்கள். ஆகவே ஹரி நாமஸ்மரணையினால் சஜ்ஜனர்கள் சத்கதி பெறட்டும் என்று, அவர்களின் அனுபவங்களை நம்முன் வைத்தனர்.

நாமவே காயுவுது நாமவே உளிவுது
நாமவெ சர்வபவித்ர மாடுவுது
நாமவெ கனதுரித சம்ஹார மாடுவுது
நாமவெ நெனவங்கெ வஜ்ராங்கியிப்புது
நாமவெ சகல பக்த ஸ்தோமவ பாலிபுது
நாமவெ நிந்தல்லி குளிதல்லி மஹாபாக்ய
நாமவொந்து நெனெயெ விஜயவிட்டலன
தாமவெ ஆகுவுது தடெயதெ நிமகெல்லா || -- ஶ்ரீவிஜயதாசர்

ஹரிநாம ஹரிநாம துரிதராஷி பீம
ஹரிநாமவொந்தக்கெ அனந்தபகெ கர்ம
சரிபாரவு காணோ இதகெ சம்ஷய சல்ல
ஹரிநாம தொரெது கர்மமாடலு தோஷ
கரகது கரகது ஹெம்மெட்ட பொகம
ஹரிநாமதலி ப்ரீதியிட்டு கர்மவ
தொரெயெ பாபவில்ல பலவக்கு சுர
குரு விஜயவிட்டலரேயன நாம
ஸ்மரிஸித மனுஜங்கே ஸ்திரவென்னி ஞானபக்தி || -- ஶ்ரீவிஜயதாசர்

ஹரிநாம லக்ஷ்மி காணோ தாரித்ர்ய ஜனரிகெ
ஹரிநாம பவன காணோ துரித கனாவளகெ
ஹரிநாம சஞ்சீவனவோ ம்ருதப்ராய ஜீவிகளிகெ
ஹரிமூருதி ரங்க விஜயவிட்டலரேய
ஹரியெந்த மனுஜகெ ஹருஷ ப்ரவாஹவென்னி || -- ஶ்ரீவிஜயதாசர்

**கார்த்திக சுத்த த்வாதசி**

## ஸ்ரீதுளசி விவாகம்

மன: பிரசாத ஜனனி சுகசௌபாக்யவர்த்தினி ।
ஆதிம் வியாதிம் ச ஹர ஹே துளசி த்வாம் நமாம்யஹம் ॥

இன்று மாலை துளசி தாமோதரனின் விவாக மகோத்ஸவம். தாமோதரனின் ப்ரீத்யார்த்தமாக பிரபோதோத்ஸவம் மற்றும் விவாகம். விதிபூர்வகமாக, ஷோடஷோபசார பூஜாதிகளை செய்யவேண்டும். தாமோதர ஸ்தோத்திரம், மங்களாஷ்டகங்களை சொல்லவேண்டும். கங்கை, பசு, துளசி ஆகியவை நம் சம்பிரதாயத்தின் முக்கிய அடையாளங்கள். இவற்றை வணங்குவது போற்றுவது நம்மை மேம்படுத்துவதற்கு முக்கிய காரணங்கள் ஆகும். துளசியைப் பற்றி வியாச தாச சாகித்யத்தில் மிகவும் புகழ்ந்திருக்கின்றனர். ஹரிதாசர்களின் ஓரிரண்டு கிருதிகளைப் பார்க்கலாம்.

ஹரிகெ அர்பிஸித துளசி நிர்மால்யவ
கொரளொளு தரிஸி கர்ணதொளிட்டரெ ।
துரிதராஷிகளெல்ல அஞ்செ ஓடுவவு ஸ்ரீ
ஹரியு தன்னவரெந்து கை பிடிவ ॥ -- புரந்தரதாசர்:

பசுவைப் போல, துளசியும் முழுவதும் சர்வதேவ மயம். சர்வதீர்த்த மயம். துளசியை வணங்கி, ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்தால், அதனால் நம் துக்கங்கள் நீங்கி, நித்ய சுகம் கிடைக்கும்.

துளசி இல்லத சதன ஹொலெ மாதிகர சதன
துளசி இல்லத பீதி நரககௌசுவ ஹாதி
துளசி இல்லத தீர்த்தவெந்தித்தரு வ்யர்த்த துளசி பலு ப்ராதான்யவு ।
துளசி மிஸ்ரிதவாத நைவேத்ய கதிசாத்ய
துளசி தரிஸித தேஹ பரமசார்த்தகவய்ய
துளசி தள ஹரிகெ அர்பிஸிதவன புண்யக்கெ நெலெய நா காணெனய்யா ॥ -- விஜயதாசர்:

துளசி நின்னடிகெ நா தலெபாகி பின்னைபே
கலுஷ கர்மகள எணிசதெ |எணிஸெ சம்சார
ஜலதியிந்தெம்ம கடெஹாய்ஸு |
கலுஷவர்ஜிதெ நின்ன தளகளிந்தலி லக்ஷ்மி
நீலயனங்க்ரிகள பூஜிப |பூஜிபரிகெ பரமமங்
கலத பதவித்து சலஹுவி |-- ஜகன்னாததாசர்:

யன்மூலே சர்வதீர்த்தானி யன்மத்யே சர்வதேவதா: |
யதக்ரே சர்வவேதாஸ்ச துளசி த்வாம் நமாம்யஹம் ||

பாபானி யானி ரவிசூனு படிஸ்திதானி
கோப்ராம்ஹபால பித்ருசேவன தர்ஷனேன
நஷ்யந்தி தானி துளசீவன தர்சனேன
கோகோடிதான சத்ருஷம் பலமாப்னுவந்தி ||

**கார்த்திக சுத்த த்ரயோதசி**
**ஹரி நாமமே நம்மைக் காப்பாற்றும்.**

வியாச தாச சாகித்யத்தில் வைக்கப்படும் முக்கியமான விஷயம் என்னவென்றால் ஸ்ரீஹரியின் மாகாத்ம்ய ஞானம். ஹரிதாசர்கள் இன்னும் ஒரு படி மேலே போய் 'நீன்யாகோ நின்ன ஹங்க்யாகோ ; நின்ன நாமத பலவொந்தித்தரே சாகோ' என்றனர். ஸ்ரீஹரியின் நாமத்தின் மகிமை இவ்வாறு இருக்கிறது.

நாமவெ காய்வுது நாமவெ உணிபுது
நாமவெ சர்வத்ர பவித்ர மாடுவுது
நாமவெ கன துரித சம்ஹார மாடுவுது
நாமவெ நெனவங்கெ வஜ்ராங்கியாகிப்புது
நாமவெ கண்டல்லி நிந்தல்லி மஹாபாக்ய
நாம ஒந்து நடியெ விஜயவிட்டல நின்ன
தாமவாகுவுதய்யா தடியதெ நமகெல்லா ||-- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீமதாசார்யர், தமது கிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தில், ஸ்ரீஹரியின் நாமத்தின் மகிமையை சொல்லும்போது:
ஆர்தா விஷண்ணாஸ் ஷிதிலாம்ஸ்ச பீதா:
கோரேஷுச வியாதிஷு வர்த்தமானா: |

சங்கீர்த்ய நாராயண சப்த மாத்ரம்
விமுக்த துக்கா: சுகினோ பவந்து ||

துக்கத்தில் விழுந்து கஷ்டப்பட்டு, அதற்கான தீர்வு கிடைக்காதபோதும், எந்தவித துயரத்தில் இருந்தாலும், நாராயண நாமோச்சாரணை நம்மை காப்பாற்றும்.

கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண எந்து மூருபாரி நெனெயிரோ |
சந்துஷ்டனாகி முக்தி கொட்டு மிக்க பார ஹொருவனொ || -- ஶ்ரீவியாசராஜர்

நாரசிம்ஹன திவ்ய நாமவனு நெனெதரெ
கோர பாதகவெல்ல தொலகி போகுவுது -- ஶ்ரீகனகதாசர்

ஹரிபதவ நெனெவங்கே நரகத பயவில்ல |
பாவன மாடுவுது நாமாம்ருதரஸ பாவன மாடுவுது || -- ஶ்ரீவாதிராஜர்

நாம சங்கீர்த்தனெ அனுதின மாள்பகெ நரக பயகளுண்டே -- ஶ்ரீபுரந்தரதாசர்

ஹரியன்னெ நெனெதவ நெரயவ கெத்தவ |
ஹரியன்னெ நெதெதவ நெரய பித்தவ || -- ஶ்ரீகோபாலதாசர்

மொத்தமாக பார்த்தால், ஹரிதாச சாகித்யத்தின் நோக்கம் ஹரி நாமஸ்மரணையே. காரணம், அறிவுள்ளவன் என்று நினைக்கப்படும் மனிதனை, எந்தக் காலத்திலும் காப்பாற்றுவது ஹரி நாமம் ஒன்றே. இதை பிரகலாதன், த்ருவன் ஆகிய பல சுஜீவிகள் செய்து காட்டிய உதாரணங்களை பார்த்திருக்கிறோம்.

**கார்த்திக சுத்த சதுர்தசி**

**சுந்தர விக்ரஹ ஶ்ரீஹரி**

ஶ்ரீஹரியின் முகம்:
ஶ்ரீரமணி கூட ஏகாந்தவாடுவ வதன | சுரசுந்தரவாத வேதவதன
சாருஷோபித தந்தபங்மவஸெவ வதன |
காருண்யதலி சோனெகரெவ வதன
காருண்யநிதி காமிகாந்த விஜயவிட்டல |

சௌரிய சித்ரவிசித்ர வதன ||

ஸ்ரீஹரியின் கண்கள்:
சந்த்ரமண்டல போலுவ இந்திரா மொகவனு
சந்ததிந்தலி பிடதெ நிக்ஷிசுவ லோசன
மந்தஹாஸ ஷீதளவாகி பாதவனு
பொந்தித பக்தரன நோடுவ லோசன
வந்திஸி கொண்டாடி ஒந்தே பகுதியல்லி தேவன நம்பலு
நந்ததிந்தலி சுதா பிந்துகரெவ லோசன
கந்தர்பபித நம்ம விஜயவிட்டல நின்ன
த்வந்த்வானந்த பொளெவ சுலோசன ||

ஸ்ரீஹரியின் வயிறு:
கமலா கமலாசனதிந்தொப்புவ பொக்களமலவாகி
மெரெவ பலுகாந்தியாத உதர
ஷமதமவானந்த குனபரிபூர்ணவாத
ப்ரமெகளு தும்பித கலுஷஹர உதர
அனந்தஜாண்டதொளகெ பதுகுமாடுவ உதர
அனந்த விஜயவிட்டலரேயன உதர ||

ஸ்ரீஹரியின் கைகள்:
வைகுண்டவெந்து தோருவ ஹஸ்த
லோகபாலிப லாவண்ய ஹஸ்த
ஸாகாரவாத ஸ்வதந்த்ர ஹஸ்த
ஏகமயன ஹஸ்த ஆ கடிகர ஹஸ்த
ஸ்ரீகர விஜயவிட்டல சனகாதிகள பாலிபஹஸ்த
துஷ்டமர்தன ஹஸ்த சிஷ்டபாலக ஹஸ்த
ஸ்ருஷ்டீஷ விஜயவிட்டலன திம்மன ஹஸ்த ||

ஸ்ரீஹரியின் சரணங்கள்:
தருண அருணகிரணதந்தெ போலுவ சரண
தரணி ஹரிணாங்கரனு தரனமாடுவ சரண

ஸ்ரீஹரிய நகங்கள்:
இந்திராதேவி குணிஸி எணிசுவேனெந்து
ஒந்து சாரி நோடலு பெரகுதோரித நக

விகஸித கெந்தளகெ சத்ருஷவாத நம்
அர்சிபர ஹ்ருதயதொளகெ மினுகுவ நக
அர்சித விஜயவிட்டலரேயன நக ||

ஸ்ரீஹரியின் பாதங்கள்:
த்வஜவஜ்ராங்குஷ பங்கஜ குங்குமாங்கித
நிஜரேகேயிந்தொப்புவ ஸ்ருஜிதரஹித பாத
த்ரிஜகமோஹன்ன பாத த்ரிகுணரஹிதபாத
பரிபூர்ண மூருதிய அருணவருண பாத
குணகண்னிலய நிர்குண விஜயவிட்டல
அணோரணிமூர்த்தி எந்தனிபன்ன பாத || -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீஹரியின் அழகான ரூபம்:
எத்த நோடலு சர்வத்ர பரிபூர்ண
ப்ருத்யனு நானு ஹுடுகுத்த நின்ன
சுத்த நோடி நோடி மத்தெ காணதெ போகி
ஈ தெரெதாடுவெ சித்தஜனய்யனெ ||
காணத நின்னனு நானாகு அவயவகள
இனிது பரியா அனிசபேகு |
மானபூர்ணனு ஆகி நான்யாகாடிசலெந்தா
ஜாண கோபால விட்டல காணிசிகோ நீ ப்யாகு || -- ஸ்ரீகோபாலதாசர்

**கார்த்திக பௌர்ணமி**

**மிகவும் அழகானவன் ஸ்ரீஹரி**

பகவந்தனை ஸ்ரீமதாசார்யர் 'அஷ்டமரஸ' என்று அழைத்தார். எந்த குணத்திலும் ஸ்ரீஹரிக்கு யாரும் சமமானவர் இல்லை. அப்படியெனும்போது, உத்தமரும் இல்லை. இவனின் ரூப லாவண்யத்தைப் பற்றி தாசர் கூறுவது இப்படி:

சரண தளதல்லி கெம்பு - சுத்த
அரவிந்த த்வஜ வஜ்ர சொம்பு - ஸ்துதி
பரிகெ சுரபோஜ தம்பு - நோட
சரஸி காணதோ வேதகும்பு, ஆஹ
ஹரடி ஹெம்பளெ சால்பரளைதர மேலே

சுரசிரரேகெ சந்த்ரமன சோலிபனக ||1||

ரத்னபவள சர தரகு - ஜோட
கன்னடி ஹாகித மலகு - நோடு
ஆனந்தசூர்யர ருளகு - லோக
சன்னாகி தும்பித பௌகு
ரன்ன த்ரிவளீ ஹேமசண்ண முத்தின மோ
ஹன்ன ஏகாவளி சின்னத சரகள ||2||

சிரிவத்ஸ கௌஸ்துப ஹார - பொப்பெ
உர வைஜயந்தி மந்தார - மேலெ
தருன துலசி ஜனிவார - இட்டு
வரபுஜகீர்த்தி குஞ்சர, ஆஹ
கரதந்தெரடு தோளு எரடொந்தாரு சா
விர ரூபனாகி ஷரீரதொளிப்பன ||3||

சக்கரெ துடி கூர்ம கதபு - கண்ணி
கிக்கத சொபகின கப்பு - தலெ
ஹிக்கி பாசித கேஷ தளபு - சர்வ
திக்கு மொஹிசுவந்த பலவு - ஆஹ
லக்குமீதேவிய லெக்கிசதெ மகன
பொக்குளந்தலி பத்த அக்கஜத பலெய ||4|| -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீமத் பாகவதத்தில் ஸ்ரீஹரியின் ஆபாதமௌளி வரைக்கும் தியானம் செய்வதைப் பற்றிய விவரங்களை தெரிவித்திருக் கின்றனர். 'சஞ்சிந்தயேத் பகவதஸ் சரணாரவிந்தம்' என்று, சாமான்யரும் சிந்தித்து தியானித்து மேம்படுமாறு தாசர் ஸ்ரீஹரியின் விக்ரகத்தை தாம் கண்டு, நம்முன் வர்ணித்து வைக்கிறார். இந்த திவ்ய ஆக்ருதியின் சிந்தனை நம் மனதில் நிறைந்திருக்கட்டும்.

**கார்த்திக பகுள ப்ரதமை**

**அனைத்தும் நீயே**

த்வமேவ மாதாச பிதா த்வமேவ
த்வமேவ பந்துஸ்ச சகா த்வமேவ |

த்வமேவ வித்யா த்ரவிணம் த்வமேவ
த்வமேவ சர்வம் மம தேவதேவ ||

ஸ்ரீமதாசார்யர் தமது த்வாதச ஸ்தோத்திரத்தில் - ஹரிரேவ ஜகத் பித்ருமாத்ரு கதி: - என்றதுபோல, ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரி அனைத்தும் படைப்பவனாக பக்தர்களுக்கு வரங்களைக் கொடுப்பவனாக இருக்கிறான். சில விசேஷ சந்தர்ப்பங்களில் ஸ்ரீஹரி எப்படி அருள்வான் என்பதை ஸ்ரீமொதலகல்லு சேஷதாசர் அவரின் இந்த கிருதியில் வர்ணிக்கிறார்.

பக்தர மனோரதவ பூர்ண மாடுதல்லி
உத்க்ருஷ்டவாத காமதேனு எனிபெ
பக்தர அபராத சஹன மாடுவல்லி த
ரித்ரிகெ தமனெனஸி சார்வபௌம
பக்தர மேலே மஹகருண மாடுவல்லி
பித்ரு மாத்ரு ப்ராத்ரு குரு சமானனெனிபெ
பக்தர அபிமான சஹன மாடுவல்லி
மித்ரனெனஸிகொம்பெ அனிமித்த பந்து
பக்தர துரித களெது காவ விஷயதல்லி
பத்ரனெனிபெ சதத சன்மங்களாங்க
பக்தர நிந்தகர நிக்ரஹ மாடுவல்லி
ம்ருத்யு யமகெ சத்ருஷனெனிப தேவ
ப்ருத்யவத்ஸல குருவிஜயவிட்டலரேய
பக்தர பொரெவ பிருது நினதய்யா ||

தாசர், இந்த உகாபோகத்தை இயற்றி, ஆபத்தில் இருந்த ஒருவருக்கு இதை உபதேசித்து, அந்த ஆபத்தினை போக்கினார் என்று கேள்விப்படுகிறோம். ஆகையால், இதை ஆபத்தினை பரிகரிக்கும் ஸ்தோத்திரம் என்று சொல்லலாம். ஸ்ரீஹரி பக்தர்களின் ஆபத்பாந்தவனாக இருக்கிறான். அதற்கே அவனை ‘பித்ரு மாத்ரு ப்ராத்ருகுரு சமனெனிபெ’ என்று கொண்டாடினார். இத்தகைய பிரச்னையான சமயங்களில், ஸ்ரீஹரியை என்னவென்று சொல்லி வணங்கவேண்டும் என்பதையும் தாசர் சொல்லிக் கொடுக்கிறார். அவன் நமக்கு எதையும் எதிர்பார்க்காத நண்பனாக இருப்பது மட்டுமல்லாமல், துஷ்டசக்திகளை நீக்கும்படியான ‘ம்ருத்யோர்

ம்ருத்யுவாக' இருக்கிறான். இப்படி தாசர், ஸ்ரீஹரியை வணங்கும் விதிகளை நமக்குச் சொல்லி உதவியிருக்கிறார்.

## கார்த்திக பகுள த்விதியை கனகதாசரின் ஆத்மநிவேதனம்

நவவித பக்திகளில் ஒன்று - ஆத்மநிவேதனம். இதை, ஸ்ரீஹரியிடம் நமக்கு தோன்றும் தாஸ்ய பாவம் என்றும் சொல்லலாம். அனைத்து காலங்களிலும், இங்கும், முக்தியிலும், நம்மை ஸ்ரீஹரியிடம் ஒப்படைக்கும் சிந்தனை இது. நம்மையே நிவேதித்துக் கொள்ளும் நிலை. இதற்கே, கனகதாசர் அனைவருக்கும் சொல்லிக்கொடுத்த விதி இதுவே. இதை அப்படியே பின்பற்றி நாம் தன்யராவோம்.

ராகம்: கேதார கௌள. தாளம்: அட

தனு நின்னது ஜீவன நின்னது ||ப||
அனுதினதலி பாஹோ சுக துக்க நின்னதய்யா ||அப||

சவினுடி வேத புராண சாஸ்திரங்கள
கவியிந்த கேளுவ கதெ நின்னதோ
நவமோஹனாங்கேர ரூபத கண்ணிந்த
எவெயிக்கதெ நோடுவ நோட நின்னதய்யா ||1||

ஒடகூடி கந்த கஸ்தூரி பரிமளகள
பிடதெ லேபிஸி கொம்புது நின்னது
ஷடுரஸதன்னக்கெ நலிதாடுவ ஜிஹ்வே
கடு ருசிகொண்டரெ ஆ ருசி நின்னதய்யா ||2||

மாயாபாஷத பலியொளகெ சிக்கிருவந்த
காய பன்சேந்திரியகளு நின்னவோகாயஜ
ஜனக ஒடெய ஆதிகேஷவ ராய
நீனல்லதெ நரரு ஸ்வதந்த்ரரே? ||3||

இங்கு, கனகதாசரின் ஆத்மநிவேதன சிந்தனையின் அற்புதமான கற்பனையைக் காண்கிறோம். 'தேனாவினா த்ருணமபி ந சலதி'

என்பதுபோல அனைத்தும் உனதே என்று அனைத்தையும் ஸ்ரீஹரியிடம் சமர்ப்பித்து, தன்னையும் அர்ப்பித்துக் கொண்டார். ஆத்மநிவேதனத்தின் விதிகளை படிப்படியாக விளக்கி, ஸ்ரீஹரியிடம் சமர்ப்பித்து, அனைத்தும் உனதே என்றார். சம்சார சாகரத்தில் சிக்கிய ஜீவிகள், அதிலிருந்து வெளிவருதற்கு இந்தப் பாடலில் சொல்லியவற்றையே வேண்டிக்கொள்ள வேண்டும். இதற்கே புரந்தரதாசர்:

நீனே கதி நீனே மதி ஸ்வாமி
நீனில்லதன்யத்ர தெய்வகள நானரியே ‖ என்று வேண்டினார்.

கோபாலதாசரின் வாக்கும் இதன்படியே இருப்பதைக் காண்போம்.
பார நின்னது என்ன எல்லி நீனிரிஸிதரு சாரி மொரெ இடுவே
லாலிஸு பின்னப ‖

**கார்த்திக பகுள த்ருதியை**

**கனக ஜெயந்தி**

ஸ்ரீஹரியின் கிருபைக்கு பாத்திரராவதற்கு ஜாதி, குலம் இது எதுவும் முக்கியமில்லை என்று உலகிற்கு அறிவித்தவர் கனகதாசர். சிறந்த ஹரிதாசர்களில் ஒருவராகக் கருதப்படுபவர். கனகத்திற்கு (தங்கம் / பொன்) தாசன் ஆகாமல் இருந்தவர். ஸ்ரீவியாஸராஜர் போன்ற உத்தம குரு. ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீவிஜயீந்திரர் போன்ற சிறந்தவர்களின் பழக்கம், புரந்தரதாசர் போன்ற சிறந்த ஹரிதாசர்களின் நட்பு ஆகியவை கிட்டிய பெரும்பேறு இவரது.

தாசதீட்சை பெற்று, ஸ்ரீஹரியை எந்நேரமும் போற்றிப் பாடியவர் கனகதாசர்.

ஹரிதீர்த்த ப்ரஸாத ஜிஹ்வெகெ தொரகிது
ஹரிதாசரு என்ன பந்துகளாதரு
ஸ்ரீஹரி முத்ரெ ஆபரணவாய்து ‖ என்றார்.

தாசர் ஆனபிறகு இவரது வாழ்க்கையின் நோக்கம் இரண்டானது. ஸ்ரீஹரியைப் புகழ்ந்து பாடிக்கொண்டே, சமூகத்தை திருத்தி அவர்களை சத்கதிக்கு அழைத்துச் செல்லும் எண்ணத்தில்

நடக்கலானார். 'முண்டிகே தாசர்' என்றே அறியப்பட்ட இவரது பாடல்களில் ஸ்வர சாகித்யங்கள் அதிகம் காணப்படுகின்றன. சிறிய கிருதிகளில் துவங்கி, நீண்ட கிருதிகள் வரை பலவற்றை இயற்றினார். விஷ்ணுவின் மகிமைகளைப் பாடியவாறு, உலகநீதி, ஆத்யாத்ம சங்கீதம், கலைகள் ஆகியவற்றிற்கும் இவர் ஆற்றிய தொண்டு / செய்த உதவிகள் அளவிடமுடியாதவை.

விசேஷமாக திருப்பதி, உடுப்பி பயணம். உடுப்பி கிருஷ்ணனை வணங்கி, அவனின் தரிசனம் பெற்றது மிகவும் சிறப்பு. இந்த தாசரின் பாடல்களை வயது வித்தியாசம் இல்லாமல் அனைவரும் பாடி, புனிதர் ஆவதைக் காண்கிறோம். பாடதாதி கேசவ, நெலெயாதி கேசவ என்னும் அங்கிதத்துடன் கிருதிகளை இயற்றி, அவனிடமே தன்னைக் கொடுத்தார்.

ஹரி முகுந்தன நீனு நரஜென்ம ஹுளு நானு
பரமாத்மா நீனு பாமரனு நானு -
என்று ஸ்ரீஹரியின் மகிமையைப் புகழ்ந்தார்.

தனது அனுபவத்தில் தாம் கண்டவற்றை பாடல்கள் மூலமாகக் கூறினார். அவை நம்மை நல்வழிக்கு மாற்றக்கூடியவை. 'ஹுட்டுவாக ஏனோ தரலில்ல | ஹோகுவாக ஏனு ஒய்யலில்ல', என்ற உண்மையை எடுத்துரைத்து, 'தர்மவ களிஸிரோ' என்றார்.

கனகரின் மோகனதரங்கிணி, நள சரித்ரே ஆகியவை மகாகாவியங்கள் என்றால், ஹரிபக்திசார - நம் வாழ்க்கையின் தரிசனம். கேசவநாம போன்ற கிருதிகள் அனைவரும் தினமும் சொல்லக்கூடியவை. கனகரின் விரக்தி வாழ்க்கையானது, ஞான பக்தி வைராக்யங்களின் கூட்டு. இதுவே சஜ்ஜனர்களின் சிறந்த வழிகாட்டியாக இருந்தது. த்வைத சித்தாந்தத்தையே நம்பி, பின்பற்றியவர் கனகதாசர்.

குரு முக்ய ப்ராணன மானவரெல்ல பஜிசிரோ
நந்ததீர்த்தர மததொளகெ பந்தவரெல்லா ||
எந்திகாதரு பரமானந்த பொந்துவரு || என்று பாடினார்.

**கார்த்திக பகுள சதுர்த்தி**

## தத்வாபிமானி தேவதைகளை வணங்குவோம்

ஜீவனின் உடலில், ஒவ்வொரு உறுப்புகளிலும், அந்தந்த உறுப்புகளுக்கேற்ப செயல்களைப் புரிந்து, அதற்கேற்ப அவர்களுக்கு சுக துக்கங்களை அளித்துக் கொண்டிருப்பவர்கள் - தத்வாபிமானி தேவதைகள். ஜீவியின் பிறப்பிலிருந்து துவங்கி, இந்த உடலை விடும்வரைக்கும், எப்போதும் உடனேயே இருந்து செயல்களை செய்பவர்கள் இவர்களே.

தத்வாபிமானிகளிரா உத்தரவ பாலிபுது
எத்தகரெவ முகுவெ வினயதல்லி
ஆத்மதொளகெ நிம்ம வ்யாபார கனவைய்ய
தத்வஸ்தானதல்லி நித்யவாகி
தைத்யரிகெ சர்வத நிம்ம ப்ரேரணெயுண்டு
ஆத்ம எளெசதிரி துஸ்ஸங்கக்கெ
சித்ததலி நீனே நிஜவ்யாபார மாடுவரு
சத்யக்கெ எரகுவ மார்கவித்து
உத்தமகுணதல்லி மொதலெ நிம்ம பூஜிப
அர்தியாகலி ஆ தருவாயதி

உத்தம ஸ்லோக சிரிவிஜயவிட்டலன
திதிஸி ஆதன்ன சரணனோள்பத மாடி || -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீஹரியின் முகத்திலிருந்து பிறந்த தத்வங்களின் அபிமானி தேவதைகளின் நினைவு நமக்கு மிகவும் முக்கியம். இவர்களில் வாயுதேவர் நிலைத்திருந்து, அந்த வாயுவில் ஸ்ரீஹரி இருந்து, அனைத்தையும் நடத்துகிறான். சாம்ஷரான தத்வாபிமானி தேவதைகளின், ரிஷி முனிகளின், பித்ருகளின் தயை நமக்கு வேண்டும் என்று நாம் தினமும் பிரம்மயக்ஞத்தை செய்யவேண்டும்.

ஹரிகதாம்ருதசாரத்தில் ஜகன்னாததாசர் 24 தத்வாபிமானி தேவதைகளின் மற்றும் அவர்களின் உள் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களை விவரிக்கிறார்.

சதுரவிம்சதி தத்வதொளு த
த்பதிகளெனிசுவ பிரம்மமுகதே
வதெகளொளு ஹன்னொந்து நூரைவத்தெரடு ரூப |
விததனாகித்தெல்ல ஜீவர
ஜதன மாடுவகோசுக ஜக
த்பதிகெ ஏனாதரு பிரயோஜனவில்லவதரிந்த || (6-23)

24 தத்வங்களில் கேசவாதி ரூபங்கள், பிரம்மாதி தேவதைகளில் மொத்தம் 1152 ரூபங்களில் நிலைத்திருக்கிறான் ஸ்ரீஹரி.

## கார்த்திக பகுள பஞ்சமி
## சர்வக்ஞராயரின் கருணை

எந்தா கருணாளோ சர்வக்ஞராயரு
சிந்தாமணியெ காணோ சிரகால நமகெல்ல
ஷாந்தனாகி லோக மலின தர்ப்பணதந்தெ
ப்ராந்தியல்லி நித்ய முளுகிரலு
மந்த்ரோபதேஸிசி அம்ருதகரெவ மஹா
க்ரந்தகள மாடி மந்தஜனக
சிந்தெ போகாடிஸி அனாதியிந்த பந்த
க்ரந்தியனு பிடிஸி தத்வானுசார
எந்தெந்து மனஸிகெ சௌகர்யவாகுவ
பந்த தோரிதரய்ய பேதார்த்ததி
பிந்தெ முந்தீக நூராரு குலகெ
அந்தகன பாதெ இல்லதந்தேவே
சந்தோஷவித்து எந்திகு ப்ரதிகூலத
காந்தார கடிவ குடார காணோ
இந்து சஜ்ஜனரன்னு பாலிஸி அதிதீவ்ர
சந்தரிகெ நவவித பக்தி புட்டு
வந்தெ கேவல சாதனகெ த்வாரகெயல்லி
நிந்தித்த நிகமகோசர ருக்மிணி
காந்தன விக்ரஹ நிலிஸி லக்ஷ்மணதிந்த
தந்த்ரசாரோக்ததி பூஜெ மாடிதரு
எந்த குருகளோ மத்வமுனிராயரு
அந்தகாணினோ நானு ரஜதபீடத மஹிபெ

எந்தெந்து பொகளிதரெ பொஸபகெயா
கந்து பிதனு இல்லி நெலயாத நானா
விருத்தாந்த ஸ்கந்தனிகெ ஷிவனு பேளிப்பனோ
தந்தகதெயல்ல தரணியொளகெ ஆ
த்யந்த காலதலிதெ ஸித்தவென்னி
அந்தரங்கத ஸ்வாமி விஜயவிட்டல ஸ்வ
தந்த்ர புருஷ மத்வமுனிஹ்ருதயதிந்த || -- ஸ்ரீவிஜயதாசர்

**கார்த்திக பகுள சஷ்டி**

## நினைவு - மறதி

ஸ்ரீஹரியை நினைத்தால் மட்டுமே கிடைக்கக்கூடிய நற்பலன்களை, பல்வேறு புராண இதிகாசங்களில் பார்க்கிறோம். அதற்கே தாசர் ‘ஸ்மரணெயொந்தே சாலதே’ என்று கொண்டாடினார். ஸ்ரீமதாசார்யரின் செய்தி ‘சந்ததம் சிந்தயேனந்தம் அந்தகாலே விசேஷத:’. ஸ்ரீகோபாலதாசர், தமது ஒரு சுளாதியில் ‘ஸ்மரணையே சகல பாபஹர, விஸ்மரணெயே துக்கக்கெ காரண’ என்று மிகவும் அழகாக விவரிக்கிறார். அந்த சுளாதி:

நின்ன ஸ்மரணே எனகே தீர்த்தயாத்ரெகளய்ய
நின்ன ஸ்மரணே எனகே யக்ஞதானங்களய்ய
நின்ன ஸ்மரணே எனகே தபஸ்ஸு சித்திகளய்ய
நின்ன ஸ்மரணே எனகே பல தைர்யவு என்னய்யா
நின்ன ஸ்மரணே எனகே இஹபரதல்லி லாபவய்ய
நின்ன ஸ்மரணே எனகே சித்தவாத முகுதியய்யா

நின்ன ஸ்மரணெயிந்த ஆவகர்மமாடலு
புண்யத பலவு தொரெயது ஜீவரிகெ
கண்ணு பிகிது கட்டி சித்ரவ பரெதந்தெ
நின்னரியத கர்ம அனந்த மாடபேகெ
கன்னிகெகெ பால்யதி கண்டவரு பதி ஆதந்தெ
நின்ன ஸ்மரணெல்லதெ கர்ம ஈ பரியோ தேவ
நின்ன விஸ்மரணெயே கோஹத்ய பிரம்மஹத்யெ
நின்ன விஸ்மரணெயே பஞ்சமஹாபாதக
நின்ன விஸ்மரணெ சர்வ அபராதவய்ய

நின்ன விஸ்மரணவெ சகல நிஷேதகளு
நின்ன ஸ்மரணெவெ இப்பகளய்ய
நின்ன ஸ்மரணெயிரலு அதம கர்மவமாடலு
அன்யாயவெனிசது ஆகம சம்மதவு
கன்னதயா நிதி கோபாலவிட்டலா ||

நின்ன ஸ்மரணே புண்ய | நின்ன விஸ்மரணே பாப ||

**கார்த்திக பகுள சப்தமி**

**சஜ்ஜனர்கள் - துர்ஜனர்கள்**

மூன்று வித ஜீவர்களின் லட்சணங்களை ஸ்ரீகிருஷ்ணன் பகவத்கீதையில் விவரிக்கிறார். அதற்கேற்ப, ஸ்ரீஜகன்னாததாசர் தமது ஹரிகதாம்ருதசாரத்தில் சொன்னதை பார்க்கலாம்.

ஞான பக்தி விரக்தி வினய புராண
சாஸ்திர ஸ்ரவண சிந்தன
தான ஷம தம யக்ஞ சத்ய அஹிம்ஸ பூததய |
தியான பகவன்னாம கீர்த்தன
மௌன ஜப தப விரத சுதீர்த்த
ஸ்னான மந்த்ர ஸ்தோத்திர வந்தன சஜ்ஜனர குணவு ||
(சர்வஸ்வாதந்த்ர சந்தி #18)

சஜ்ஜனர்களுக்கு இருக்கவேண்டிய நற்குணங்களை பட்டியலிட்டுக் கொடுத்திருக்கிறார். போலவே, துர்ஜனர் - அதாவது தாமஸர்களின் லட்சணங்களையும் சொல்கிறார்.

காம லோப க்ரோத மத ஹிம்
சாமயான்ருத தம்ப கபட த்ரி
தாமனவதாரகள பேத அபூர்ண சுகபத்த |
ஆமிஷ நிவேதித அபோஜ்யதி
தாமஸான்னவனும்ப தாமஸ
ஸ்ரீ மதாந்தர சங்கதிந்தலி தமவெ வர்த்திபுது ||
(சர்வஸ்வாதந்த்ர சந்தி #17)

உலகத்தில் இருக்கும் அனைத்து துர்குணங்களின் சங்கமமாக, சஜ்ஜனர்களுக்கு எதிரியாகி, ஸ்ரீஹரியிடம் வேறுபாடுகளைக் கண்டுபிடித்து விரோதம் கொள்பவர்கள் இந்த துர்ஜனர்கள். இந்த ஹரித்வேஷிகள், நவவித த்வேஷங்களை பின்பற்றி கெட்ட செயல்களையே செய்துகொண்டிருப்பர். ஜீவர்களின் தகுதிக்கேற்ப அவர்களுக்கு பாவ புண்ணியங்களை பிரித்துக் கொடுக்கிறார் ஸ்ரீஹரி. இப்படி அவர் பிரித்துக் கொடுக்கும் செயல்களை தாசர் விவரிக்கும் விதம் இவ்வாறு:

புண்யகர்மகெ சஹயவாகுவ
தன்யரிகெ கல்யாதி தைத்யர
புண்யபலகளனீப திவிஜர பாபகர்மபல |
அன்ய கர்மவ மாள்பரிகெ அனு
குண்ய ஜனரிகெ கொடுவ பஹுகா
ருண்ய சாகர நீதெரதி பக்தரனு சந்தெய்ப ||
(சர்வஸ்வாதந்த்ர சந்தி #14)

மூன்று வித ஜீவர்களுக்கும் அவரவர்களின் தகுதிக்கேற்ப, சம்சாரத்தில் மூழ்கடித்து, சுக துக்கங்களைக் கொடுத்து, இறுதியில் கதியைக் கொடுக்கிறார். தனக்கும் யாருக்கும் சம்பந்தம் இல்லாமல் இருக்கிறார் ஸ்ரீஹரி. அனைத்து இடங்களிலும் வியாப்தனாக இருந்து, தனது எல்லையற்ற சக்தியினால், தனது உண்மையான பக்தர்களைக் காக்கிறார்.

**கார்த்திக பகுள அஷ்டமி**

**வாழ்க்கையில் பிடிப்பு**

'பத்மபத்ர இவாம்பஸா' தாமரை இலை தண்ணீர் போல பட்டும்படாமலும் இந்த வாழ்க்கையில் நமது பிடிப்பு இருக்கட்டும் என்று ஸ்ரீகிருஷ்ணன் சொல்கிறார். எந்த நொடியில் இந்த வாழ்க்கை முடியும் என்று யாருக்கும் தெரியாது. மனிதனுக்கும் வாழ்க்கைக்கும் இருக்கும் சம்பந்தத்தை தாசர் மிகவும் அழகாக தெரிவிக்கிறார். இந்தப் பிறவி / வாழ்க்கை தற்காலிகமானது என்கிறார்.

ஹீகெ பரெதீது ப்ராசீனதல்லி

ஹாகெ இரபேகு சம்சாரதல்லி
பக்ஷி கூதிது அங்களதல்லி
ஹாரி ஹோயித்து ஆ க்ஷணதல்லி
ஆடுவ மக்களு மனெ கட்டிதரு
ஆட ஸாகெந்து முரிதோடிதரு
சந்தெ நெரெதீது நானா பரி
திருகி ஹோயிது தம்ம தம்ம தாரி
வஸ்திகாரனு வஸ்திகெ பந்த
ஹொத்தாரெ எத்து ஊரிகெ ஹோத
ஈ சம்சார மாயிவ பிடிஸி
ஈஷ நீ காயோ புரந்தரவிட்டலா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

'சம்சாரவெம்பந்த சௌபாக்யவிரலி' என்றார் தாசர். நமக்கு வாய்த்த இந்த பிறவியை அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொள்ளுங்கள் என்று முறையிட்டார். கூடவே 'ஆதத்தெல்ல ஒளிதே ஆயித்து' என்ற எண்ணத்துடன் 'பந்தத்தெல்லா பரலி கோவிந்தன தயபொந்திரலி' என்று எச்சரிக்கிறார். இதற்கு புரந்தரதாசர் கொடுத்த விவரணை இது:

ஒந்து காலதல்லி ஆனெ குதுரெ மேல்மாரசுவெ
ஒந்து காலதல்லி பரிகாலல்லி நடெசுவெ
ஒந்து காலதல்லி ம்ருஷ்டான்ன உணிசுவெ
ஒந்து காலதல்லி உபவாசவிரிசுவெ
பன்னங்கசயன ஸ்ரீபுரந்தரவிட்டலா ||

மேலும்:
சாகு சம்சார தெரெயெ நோகலாரெனு
பேகு நின்ன சரணகமல பேரெ அன்யத்ரகதிய காணெ |
தாபத்ரயதல்லி நானு தேலி முணுகுத்தேனே
ஆபத்து பரிஹரிசுவெ புரந்தரவிட்டலா ஏதர ஓகெதன ||

**கார்த்திக பகுள நவமி**
**நேரத்தை வீணடிக்காதீர்கள்**

மனிதனுக்கு நேரத்தின் மதிப்பு தெரியவேண்டும். இந்த சிந்தனை இருந்தால், அவனின் சாதனையின் அளவு இரட்டிப்பாகிறது. கடந்து

போன காலம் என்றும் திரும்ப வருவதில்லை. எவ்வளவு விலை கொடுத்தாலும் கிடைக்காது. அதற்கே ஹரிதாசர்கள் அவ்வப்போது நம் கவனத்தைத் திருப்பி எச்சரிக்கின்றனர். எப்படியெல்லாம் நேரத்தை வீணடிக்கிறோம் என்று ஸ்ரீவாதிராஜர் கூறுகிறார்.

கெல ஹொத்து சதுரங்க பகடெ ஆடகளிந்த
கெல ஹொத்து ஹஸிவெ நித்ரெகளிந்த
கெல ஹொத்து காக போகர கதெகளிந்த
கெல ஹொத்து பரமார்த்த பரனிந்தெகளிந்த
காலவு கடெயாகெ ஹரி நிம்மனர்ச்சிஸி
வேளெயில்லதெ ஹோய்து பஞ்சியாகி
ஜாலிஸி ஹோயித்து ஈ விததி ஹொத்து
பாலிஸோ தயமாடி சிரி ஹயவதன || -- ஸ்ரீவாதிராஜர்

ஹோகுதிதெ ஹொத்து களெதெ வ்யர்த்தவாகி
ஹரிகுருகள நெனெயதெ || -- ஸ்ரீவாதிராஜர்

சஜ்ஜனர்களை மேம்படுத்துவதற்கென்றே அவதரித்து வந்த சிறந்த மகான் ஸ்ரீவாதிராஜர். பரிசுத்த சேதனரான இவரை நம்பியவர்கள் மேம்படட்டும் என்று இத்தகைய எச்சரிக்கைகளை விடுக்கிறார். இதே போன்று இன்னொரு பாடலில் ஸ்ரீவாதிராஜர், நம் கண்களைத் திறப்பது இவ்வாறு:

பரர பாகில காய்து போய்தென்ன சம்சார
பரர பாடி பாடி போயித்தென்ன ஜன்மவு
பரர பொகளி பொகளி போயித்தென்ன நாலிகெ
பரம கருணாகரனெ தொட்ட பெட்டவ கண்டு
பரம்ருககள ஒதரிதந்தெ ஹருஷ வாகுவுதேனோ
கல்லுகோவின ஹாலு கரு பயசுவந்தெ
அகடகட மந்தமதியு நானல்லவெ
பல்லிதராஸெ பிடிஸோ சிரிரங்கவிட்டலரேயா || -- ஸ்ரீஸ்ரீபாதராயர்

இந்த உகாபோகத்தைப் படித்தால், நம் சாதனையின் அளவில் நாம் எந்த மட்டில் இருக்கிறோம் என்று புரிந்துகொள்ளலாம். நமது பொன்னான நேரத்தை நாம் கவனிக்கவேண்டும். ஆகையால், நேரத்தைப் பற்றிய ஞானம் நமக்கு மிகவும் அவசியம்.

**கார்த்திக பகுள தசமி**

## நம் இதயத்தில் இருப்பவன்

அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரி, அனைவரின் இதயத்திலும் பிம்பரூபியாக நிலைத்திருந்து, அவர்களை காப்பாற்றுகிறான். அணுவான ஜீவனின் அணுவாகவும் இருக்கிறான். புராணங்கள் இதையே சொல்கின்றன.

ஹ்ருதிஸ்திதம் பங்கஜமஷ்ட பத்ரம் சகேஸரம் கர்னிகபத்மனாளம் |
அங்குஷ்டமாத்ரம் முனயோ வதந்தி த்யாயேத்விஷ்ணும் புருஷம் புராணம் ||

ஜீவர்களின் இதயத்தில் எட்டு தள தாமரை இருக்கிறது. இதன் நடுவே ஸ்ரீஹரி, ஜீவரின் ஸ்வரூப தேகத்தின் கட்டை விரலளவு, பிம்பரூபி என்ற பெயரில் இருக்கிறான். ஸ்ரீஹரியின் ரூபத்தை புரந்தரதாசர் இவ்வாறு கூறுகிறார்.

அஷ்டதள ஹ்ருத்கமல அதகெ மூவத்தெரடு கேஸரா
அஷ்டரொளு கர்னிகனாள அரிஸி ஸ்ரீபூதேவியு |
அஷ்டபாஹு அஷ்ட ஆயுத அங்குஷ்ட மாத்ர விஷ்ணு
அஷ்டதிக்பாலகரிரலு அல்லி பிரம்மாதிகளிந்த || -- ஸ்ரீபுரந்தரதாசர்

இந்த விஷயத்தை ஸ்ரீவிஜயதாசர் ஒரு சுளாதியில் விவரிக்கிறார்.

விஷ்ணு அங்குஷ்ட பிரமாண விஷ்வவியாபகனாகி
அஷ்டபாஹு அஷ்ட ஆயுத அதிசார சௌந்தர்ய
அஷ்ட பரிமித த்வாத்ரிம்ஷலக்ஷண ஸ்பஷ்ட
கர்ணிக பத்மநாள ஷோபிசுத்திப்ப
ஸ்ருஷ்டியொளகெ இது திளித மனுஜ ஞானி
இஷ்டார்த்த கொடுவ ஸ்ரீவிஜயவிட்டலா || -- ஸ்ரீவிஜயதாசர்

இப்படி ஜீவர்களின் இதய நடுவில் நிலைத்திருக்கும் ஹம்ஸ நாமக ஸ்ரீஹரியின் ரூபத்தை, என் தேகத்தின் ஒவ்வொரு இடத்திலும் இருக்கும் தத்வாபிமானி தேவதைகளில் இருக்கும்

அந்தந்த தேவர்களில் இருக்கும் ஸ்ரீஹரியை, ஜகன்னாததாசர் வர்ணிப்பது இப்படி.

ஜீவனங்குஷ்டாக்ர மூருதி
ஜீவனங்குஷ்ட மாத்ர மூருதி
ஜீவன பிராதேஷ ஜீவாகார மூர்த்திகளு ।
ஏவமாதி அனந்த ரூபதி
யாவதவயவகளொளு வியாபிஸி
காவ கருணாளுகள தேவனு ஈ ஜகத்ரயவ ॥ (9-8)

இந்த இதயத்தில் சூக்ஷ்மமாக இருக்கும் ஸ்ரீஹரியை ஞானிகள் - ஆத்மா, ப்ராக்ஞ, விஷ்வம்பர - என்னும் பெயரிலும் அழைக்கின்றனர்.

**கார்த்திக பகுள ஏகாதசி**

**சக்தி வாய்ந்தவன் ஸ்ரீஹரி**

'கர்த்தும் அகர்த்தும் அன்யதா கர்த்தும் அபி சமர்த்தா:' ஸ்ரீஹரி இப்படிப்பட்டவர் என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. இதை தாசர் எளிமையாக விளக்குவது இப்படி:

அணுவாகபல்ல மஹத்தாகபல்ல
அணுமஹத்தெரடு ஒந்தாக பல்ல
ரூபவாகபல்ல அரூபவாகபல்ல
ரூப அரூப எரடொந்தாகபல்ல
வியக்தனாகபல்ல அவ்யக்தனாகபல்ல
வியக்த அவ்யக்த எரடொந்தாகபல்ல
சுகுணனாகபல்ல நிர்குணனாகபல்ல
சுகுண நிர்குண எரடொந்தாகபல்ல
அகடனாகடனசக்த அசிந்த்யாத்புத மஹிம
ஸ்வகதபேத விவர்ஜித புரந்தர விட்டலா ॥ -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீஹரி சர்வதந்திர ஸ்வதந்திர. இவரின் மகிமைகளை பிரம்மாதிகளாலும் விவரிக்க முடியாது. எனில் மனிதரால் எப்படி முடியும்? தாசர் மேலும் கூறுவதாவது:

அணுவிகெ அணுவாகி கனகெ கனவாகி

குணத்ரயகெ மீரித தொரெயாகி
த்ருணமொதலாத மேரு பர்வதந்த இருவவனாகி
குண நிதி புரந்தரவிட்டல நின்ன மஹிமெ
எணிகெ மாடுவர்யாரோ என்னப்ப கம்சாரியே || -- ஸ்ரீபுரந்தரதாசர்

எல்லி நோடலு நீனு இல்லத ஸ்தளவில்ல
எல்லரந்தர்யாமி எல்லியு நீனே
ஹுல்லு காஷ்ட ஜட சேதனகளலி நீ
நில்லதில்லவெந்து எல்லோ ஸ்துதிசுதிபெ || -- ஸ்ரீகோபாலதாசர்

ஞானமயகாய ஞானமய ஐஸ்வர்ய
ஞானமயானந்த ஞானமய வர்ண
ஞாமய தேஜ ஞாமய பக்தி
ஞானமய புத்தி ஞாமய வாணி
கானலோல நாம விஜயவிட்டலரேய
நீனே நினகெ சம மௌனிவிரத த்ருதனே || -- ஸ்ரீவிஜயதாசர்

## கார்த்திக பகுள த்வாதசி செயல்கள் எதற்காக செய்கிறோம்?

வாழ்க்கையில் நாம் செய்யும் செயல்களுக்கு ஒரு பொருள் இருக்கவேண்டும். நற்பலன் கிடைக்கவேண்டும். மற்றவர்களுக்கும் உதவி செய்து, ஸ்ரீஹரியின் கருணையினைப் பெறவேண்டும். இல்லையெனில், அது செய்யும் செயல்களுக்கு அழகைத் தராது. தாசரின் இந்தப் பாடலினால் அந்த அழகு தெரியவருகிறது.

ராகம்: சங்கராபரணம். தாளம்: அட
ஹரிய நெனெயத நரஜன்மவேகே நர
ஹரிய கொண்டாடத நாலிகெயேகே ||ப||

சத்ய சௌசவில்லதாசார ஏகே
நித்யனேமவில்லத ஜபதப ஏகே
பக்திலி மாடத ஹரிபூஜெயேகே
உத்தமரில்லத சபெயு தானேகே ||1||

வேதவனோதத விப்ரதானேகே

காதலரியத க்ஷத்ரியனேகே
க்ரோதவ பிடத சன்யாசி தானேகே
ஆதரவில்லத அம்ருதான்னவேகே ||2||

சாலரி ஹோளித சம்சாரவேகெ
பாலகரில்லத பாக்யவேகே
வேளெகெ ஒதகத நெண்டரித்தேகே அனு
கூலவில்லத சதி சங்க தானேகே ||3||

மாதாபிதர பொரெயத மக்களேகே
மாது கேளத சொசெகொடதெ தானேகே
நீதி நேமில்லத கூட தானேகே அ
நாதனாத மேலே கோபவதேகே ||4||

அளிஸி அளிது போப மக்களித்தேகே
திளிது புத்திய பேளத குருவேகே
நளினனாப நம்ம புரந்தரவிட்டலன
செலுவ மூர்த்திய நோடத கங்களேகே ||5||

இங்கு தாசர் சொல்லும் ஒவ்வொரு விஷயமும் மிகவும் பொருள் பொதிந்தவை. மதிக்கத்தக்கவை. அவற்றை அப்படியே பின்பற்றுபவனே தன்யன்.

**கார்த்திக பகுள த்ரயோதசி**

**பவமான - ஜகத்ராண**

பவமானனை 'அமிர்தம்' என்று வேதங்கள் அழைக்கின்றன. இவரை வணங்குபவர்களுக்கு அதையே வழங்குகிறார். 'தம் வாயுமதம்ருதம் சர்வனாமகம்'. இவரின் தலைவன் ஸ்ரீஹரி. இவரிடம் கேட்கவேண்டியதை ஜகன்னாததாசர் இவ்வாறு கூறுகிறார்.

பவமான நம்ம குரு பவமான
பவமான பாவன்னசரித, பத்ம
பவன பதார்ஹனெ வினுத, ஆஹ
ஸ்ரவணவெ முதலாத நவவித பகுதி ஞா

நவனித்து சலுஹோ மூரவதாராத்மக தேவ ‖ -- ஸ்ரீஜகன்னாததாசர்

ஜீவர்களின் உடலில் அனைத்து பாகங்களிலும் நிறைந்திருக்கும் தத்வாபிமானி தேவதைகளில், நிலைத்திருப்பவர் வாயுதேவர். அதற்கே இவரை பிராணதேவர் என்று அழைக்கிறோம். தத்வசுவ்வாலியில் வாயுதேவரை தாசர் இவ்வாறு வர்ணிக்கிறார்.

மூரேளு சாவிரத ஆறுனூறு மந்திர
ஈ ரேளு ஜகதி ஜனரொளு |ஜனரொளு மாடி உ
த்தாரகைசுவியோ சுஜனர ‖

மிஸ்ரஜீவரொளித்து மிஸ்ரஞானவித்து
மிஸ்ரசாதனவ நீ மாடி |நீ மாடி மாடிஸி
மிஸ்ரகதிகளனெ கொடுதிப்பே ‖

வாயுஹனுமத்பீம ராம மத்வர ஸ்தோத்ர
பாயொளுள்ளவகெ ஜன்மாதி |ஜன்மாதிரோக பய
வீயனெந்தெந்து பகவந்த ‖ -- ஸ்ரீஜகன்னாததாசர்

**கார்த்திக பகுள சதுர்தசி**

## ஒன்பது முனிவரர்கள்

இந்த கலியுகத்தில் பாரதத்தின் பொற்காலம் என்று சொல்வது - தென்னிந்தியாவில் விஜயநகர சாம்ராஜ்யத்தில் குறிப்பாக கிருஷ்ணதேவராயரின் ஆட்சிக்காலத்தையே. அன்று இந்த அரசாட்சியில், ராஜகுருவாக புகழ்பெற்றிருந்தவர் - இரு மொழிகளிலும் அறிஞர், வியாஸத்ரய கிரந்தங்களை இயற்றிய ஸ்ரீவியாஸராயர். இவரின் மூல பிருந்தாவனம், நவபிருந்தாவனத்தில் உள்ளது. இந்த மகா முனிவரின் முன்னும் பின்னுமாக மொத்தம் அங்கு ஒன்பது பிருந்தாவனங்கள் உள்ளன.

ஸ்ரீஜகன்னாததாசர் இயற்றிய இந்தப் பாடல், பாராயணத்திற்கு மிகவும் பயன்படுகிறது.

பிருந்தாவனகளிகானமிபே நித்ய ‖ப‖
நந்ததீர்த்தர மதோத்தாரகரெனிப நவ ‖அப‖

வரமத்வமுனி விமலகர பத்ம சஞ்சாத
குருபத்மனாபராயர கவீந்த்ர தத்
கரசரோருஜாத வாகீசமுனிப ரகு
வர்ய கோவிந்தாக்யரொடெயர பவித்ரதம ||1||

ஶ்ரீசுரேந்த்ரார்யர சுபுத்ரரெனிப சுதீந்த்ர
வ்யாசராயர ஶ்ரீனிவாசமுனிய
பூசுரர பரமசந்தோஷதலி ஸ்மரிஸெ நி
ர்தோஷரனெ மாடி அபிலாஷெ பூரெயிசுதிஹ ||2||

தேவதெகளிவரு சந்தேஹ படெசல்ல மி
த்யாவாதிகள பராபவர மாடி
ஈ வசுந்தரெயொளகெ கீர்தியுதராகி ல
க்ஷ்மீவர ஜகன்னாதவிட்டலனைதிஹர ||3||

பத்மனாபம் கவீந்த்ரம் வாகீஷம் வியாஸராஜகம்
ரகுவர்யம் சுதீந்த்ரம்ச ஶ்ரீனிவாசம் தபோனிதிம்
ராமதீர்த்தம் ச கோவிந்தம் நவவ்ருந்தாவனம் பஜே ||

**கார்த்திக அமாவாசை**

## ஶ்ரீமஹிபதி தாசரின் ஆராதனை

ஜகத்குரும் க்ருபாசிந்தும் ஷரணாகத வத்ஸலம் |
பக்தமானஸ சஞ்சாரம் மஹிபதி குரும் பஜே ||

ஶ்ரீபுரந்தரதாசர் மற்றும் ஶ்ரீவிஜயதாசரின் நடுவில் சற்று தொய்ந்து போயிருந்த ஹரிதாச சாகித்யத்தை, கெட்டியாகப் பிடித்து காப்பாற்றியவர் ஶ்ரீமஹிபதி தாசர். ஶ்ரீஹரியின் அருளால் பிறந்தாலும், லௌகிக வாழ்க்கையை வாழ்ந்து, பிறகு ஆத்யாத்ம சாதனைகளை செய்து சத்கதி பெற்றவர். பற்பல கிருதிகளை இயற்றி தாச சாகித்யத்தை வளர்த்து இறுதியில் சன்யாசியாகி காகண்டியில் பிருந்தாவனஸ்தர் ஆனார். மஹிபதி தாசர், தனது குருவான பாஸ்கர ஸ்வாமிகளை இவ்வாறு புகழ்கிறார்.

இந்தென்ன ஜன்ம பாவனவாயிது
தந்தெ குரு நிம்ம சரணதருஷனதி

தரெயொளஞ்ஞான தமஹரண பாஸ்கரனெனிப
வரமுனிய கரகமலதலி ஜனிஸி |
வரமூல மந்த்ரதிம் குருமஹிபதியிந்த
நிருத க்யாதிய நாமதரிஸி பந்தன மஹிமெ ||

மஹிபதி அங்கிதத்தில் இவர் இயற்றிய சுமார் 700 கிருதிகள் கிடைத்துள்ளன. இவர் மராத்தி, இந்தியிலும் கிருதிகளை இயற்றியிருக்கிறார். ஸ்ரீஹரியை பாடியதோடு தம் அனுபவத்தின் பல கிருதிகளையும் பாடியிருக்கிறார். இவரின் ஆறுதல் வசனங்கள்:

நானு நன்னது எந்து ஏனு களிஸிகொண்ட்யோ
ஸ்வானுபவவ சுக அனுபவிஸதெ ஹோகி
ஸ்வான சூகர யோனி முக சோஸிதெல்ல
ஹொன்னு ஹெண்ணின சவிய பண்ணிஸி நீ பயஸிதெல்ல
மண்ணி மாணிகவெந்து தண்ணனெ தணுவரெ
கண்ணகெட்டரப்யாடோ தன்னொளரியதெ ||

ஹரிசர்வோத்தமன் என்று பாடும் ஒரு பாடலில் அனைத்தும் நீயே என்று கூறி வேண்டுகிறார்.

சகலவெனகெ நீனே ஸ்ரீஹரியெ
காவ கருண சூத்ராந்த்ரனு நீனே
பாசுத பாஹ்யாந்த்ரதொளிஹ நீனே
மஹிபதி மனோமூர்த்தியு நீனே ||

'நாம் செய்யும் அனைத்து செயல்களும் உன் பூஜையே' என்கிறார்.

***

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**